A

# CATECHISM

OF

# TAMIL PROSODY

BY

C. GOVINDASAWMY REDDIAR

SCHOOL MASTER

SHIYALI

(*First Edition.*)



---

# யாப்பிலக்கண விஞவிடை.

சீர்காழி

உபாத்தியாயர்

சி. கோவிந்தசாமி ரெட்டியாரால்

இயற்றியது.

(முதலாம்பதிப்பு.)

CHIDAMBARAM:

PRINTED AT THE BRAHMAVIDYA PRESS.

Price 4 As.)  (Postage ½ A.



1895. 

## PREFACE.

The object of this little catechism, is to place before the young student of Tamil Prosody, the principles and rules of that branch of knowledge in the most simple and systematic form. As larger works, on this science, are, beyond the grasp of young minds, it struck the author that a work in the present form, will be of immense use in the hands of the beginner of Tamil Prosody. Partly as an earnest student, and partly as a private tutor to University students in Tamil, and above all, as a devoted lover of Tamil literature, the author, has had experience of the difficulties, that generally lie in the way of the students of this particular field of Tamil Grammar. It is with this experience, that the author ventures to publish this short treatise.

In the General arrangement of the principles, the author, has followed closely the more ancient and the more elaborate works on this subject. It has been the principal object of the author, in the preparation of the volume to pave the way of the beginner to more extensive studies in Tamil prosody.

It is a matter of deep regret, that Tamil Prosody, is, as a general rule, neglected by the ordinary school going student. It is only very recently that the learning

Syndics of the Madras University, have given the subject a preminent place in the curriculam; and are endeavouring to bring home to the minds of University students, the importance of this particular province of Grammar. This is manifest from the increasing proportion of questions on Tamil Prosody, that, are of late appearing every year in the examination papers of the University. All honor to the University.

The author will feel himself highly, gratified, and his work will have gained its object, if he lives to see, that it is given a place, in the libraries of schools and Colleges and is extensively used by the rising generation of Tamil literature.

In conclusion, the author feels it his duty, to express his deep feelings of thankfulness to those kind hearted and scholarly lovers of Tamil literature for having recommended this humble attempt of mine, to those who have the interests of Tamil really at heart.

Shiyali<br>15th-August 95 } C. GOVINDASAMY REDDIAR.

## OPINIONS.

*S. A. Edward Pillay, Esq. B, A; L, T. Shiyali says:-*

I have examined with some care, the little book on Tamil Prosody by Mr, Govindasamy Reddiar, and I can confidently assert that it would prove a great boon to the student of Tamil literature; especially teachers and University students will find it invaluable. The author has spared no pains to make the subject as plain and simple as possible. The book deals in a clear and well arranged form all the main points of Tamil Prosody. Most of the examples are quotations from eminent authors. Though there are in the field many books on Tamil Prosody, most of them are not easily accessible to the ordinary students. This small pamphlet of Mr., Reddiar cannot but be appreciated, by all the lovers of the Tamil tongue.

# சாற்றுக்கவிகள்.

## மாயூரம்.

அட்டாவதானம்

ம-ா-ா-ஸ்ரீ

### சந்திரசேகரக்கவிராயரவர்கள்

இயற்றியது.

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

மாப்புகலிக் கவுணியர்கோன்புரமதமே புகுந்துழன்றமைந்தரு ய்யப், பாப்பணியும்பானியலைப்பாடியருண்மெய்ப்புகழே பரவ வ்வூரில், யாப்பியலைவினவிடையாய்க் கோவிந்தசாமியெனும் நல்லோன்செய்தா, ளுப்பயிலுந்தமிழ்மைந்தர்நன்மையன்றியீ தெதெனநவிலற்பாற்றே.

ஸ்ரீ

## தருமபுராதீனத்து

வித்துவான்

ம-ா-ாஸ்ரீ

### வி-நடராசக்கவிராயரவர்கள்

இயற்றியது.

நிலைமண்டில ஆசிரியப்பா.

பொன்புரிச்சடில னின்புறுதவத்தா
லோங்கியசெல்வ னீங்கருமறையோ

னீனசம்பந்த மென்பதிராத
ஞானசம்பந்த நன்மணிவிளக்கைத்
தன்மகவாகத் தான்பயந்தோங்க
வின்மணிகுழவி விளங்கியமூன்றும்
பருவமெய்தப் பாடியதலைமை
யருமைநாயக னவதரித்தெழுந்தப்
பன்னிருநாமப் பதியரும்புகலி
நன்னகரோங்கு நவைதீருலகி
னியலிசைநாடக மெனுமுத்தமிழ்சொற்
பயிலும்பாலர்ப் பயனெனக்கொள்ள
மற்றுளபுலவர் மகிழ்ச்சியின்மூழ்கிப்
புத்திலக்கணமென் புகழ்ந்துரைவாழ்த்தும்
யாப்பியலுறுப்பினை வாய்ப்புறச்செய்தே
பாங்குறுமுலகி லாங்கிலியர்க்கெலா
மெளிதிற்பயில வியற்றினனுயர்வா
லளியிற்சிறந்த வான்றவர்துதிக்குங்
குருலிங்கசங்கமங் கொண்டநற்பதிவா
ழிருந்தகைமேவுந் தருங்கொடையாளன்
சின்னசாமிமாற் செய்தவப்பேற்றால்
மன்னியசீலன் மாசறுமனத்தோன்
பூவிந்தைகண்டு புலமையிற்றேர்ந்த
கோவிந்தசாமி யெனும்பெயர்கொண்டு
மன்பாலுயர்ந்த வாண்டகையாள
னின்புறச்செய்தா னியாப்பிலக்கணமே.

பிறையார்

சித்திரக்கவி

ம-௱-௱-ஸ்ரீ

நா-வ-பாவாடைசெட்டியாரவர்கள்

இயற்றியது

நேரிசைவெண்பா

பாற்கடலாரின்னமுதைப்பாம்பணையானீந்தனனென்
னூற்கடலாரின்னமுதைநூதனமாய்—யாப்பணியெ
ஞமமேதந்துலகினல்கிஞன்கோவிந்த
சாமிமாலன்னவிபுதன்.

சாற்றுக்கவிகள்

முற்றிற்று

---

# CATECHISM, OF TAMIL PROSODY.

# யாப்பிலக்கண வினுவிடை.

1. வினு.—யாப்பிலக்கணமாவதியாது?

விடை. உறுப்பியல், யாப்பியல், ஒழிபியலென மூன்று பகுதிகளாய்வகுத் தப்பகுதிகளினிலக்கணங்களைக் கூறுவதே யாப்பிலக்கணமெனப்படும்.

## முதலாவது.

## உறுப்பியல்

2.—உறுப்பியலாவதியாது?

எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை யெனுமிவ் வாறுறுப்புகளையுடைத்தாயது மவ்வுறுப்புகளி னியல்பைக்கூறுவது முறுப்பியலெனப்படும்.

3.—எழுத்தாவதியாது?

உயிர், மெய், உயிர்மெய், ஆய்தமிஃதெழுத் திலக்கணத் தினுலறிவதே யெழுத்தெனப்படும்.

4.—அசையாவதியாது?

குறினெடிறனித்து மிணைந்தும் வரினசையெனப்படும்.

5.—அசைகளெத்தனைவகைப்படும்?

நேரசை, நிரையசை யென விருவகைப்படும்.

6.—நேரசையாவதியாது?

குறினெடிறனியேவரினு மொற்றடுத்துவரினும் நேரசையெனப்படும்.

(உதாரணம்) அ, ஆ, வெள், வேல்.

7.—நிரையசையாவதியாது?

குறிலிணைந்துவரினுங் குறினெடிலிணைந்துவரினு மொற்றடுத்துவரினும் நிரையசையெனப்படும்.

(உ-ம்.) வெறி, சுரு, நிறம், விளாம்.

8.—சீராவதியாது?

அசைகளோ டசைகளொன்றுவதே சீரெனப்படும்.

9.—சீரெத்தனைவகைப்படும்?

மாச்சிர், விளச்சிர், காய்ச்சீர், கனிச்சீர், நிழற்சீர், பூச்சீரெனவறுவகைப்படும்.

10.—மாச்சீராவதியாது?

| | |
|---|---|
| நேர் நேர், தேமா.<br>நிரைநேர், புளிமா. | எனும் வாய்ப்பாட்டுள்ளன<br>மாச்சீரெனப்படும். |

11.—விளச்சீராவதியாது?

| | |
|---|---|
| நிரை நிரை, கருவிளம்.<br>நேர் நிரை, கூவிளம். | எனும் வாய்ப்பாட்டுள்ளன<br>விளச்சீரெனப்படும. |

இம்மாச்சீரும் விளச்சீருமாசிரியப்பாவுக்குரியனவாம்.

12.—காய்ச்சீராவதியாது?

| | |
|---|---|
| நேர் நேர்நேர், தேமாங்காய்.<br>நிரைநேர்நேர், புளிமாங்காய்.<br>நிரைநிரைநேர், கருவிளங்காய்.<br>நேர்நிரைநேர், கூவிளங்காய். | எனும்வாய்ப்பாட்டுள்<br>ளன காய்ச்சீரெனப்<br>படும். |

இக்காய்ச் சீர்நான்கும் வெண்பாவுக்குங்கலிப்பாவுக்கு முரியனவாம்.

13.—கனிச்சீராவதியாது?

| | |
|---|---|
| நேர்நேர்நிரை, தேமாங்கனி.<br>நிரைநேர்நிரை, புளிமாங்கனி.<br>நிரைநிரைநிரை, கருவிளங்கனி.<br>நேர்நிரைநிரை, கூவிளங்கனி. | எனும் வாய்ப்பாடுள்ளன கனிச்சீரெனப்படும். |

இக்கனிச்சீர்நான்கும் வஞ்சிப்பாவுக்குரியனவாம்.

14.—நிழற்சீராவதியாது?

| | |
|---|---|
| நேர்நேர்நேர்நிரை, தேமாந்தண்ணிழல்.<br>நிரைநேர்நேர்நிரை, புளிமாந்தண்ணிழல்.<br>நிரைநிரைநேர்நிரை, கருவிளந்தண்ணிழல்.<br>நேர்நிரைநேர்நிரை, கூவிளந்தண்ணிழல்.<br>நேர்நேர்நிரைநிரை, தேமாநறுநிழல்.<br>நிரைநேர்நிரைநிரை, புளிமாநறுநிழல்.<br>நிரைநிரைநிரைநிரை, கருவிளம்நறுநிழல்<br>நேர்நிரைநிரைநிரை, கூவிளம் நறுநிழல். | எனும் வாய்ப்பாடுள்ளனநிழற்சீரெனப்படும். |

இந்நிழற்சீரெட்டும் வஞ்சிப்பாவினுள் வரப்பெறும்.

15.—பூச்சீராவதியாது?

| | |
|---|---|
| நேர்நேர்நேர்நேர், தேமாந்தண்பூ.<br>நிரைநேர்நேர்நேர், புளிமாந்தண்பூ.<br>நிரைநிரைநேர்நேர், கருவிளந்தண்பூ<br>நேர்நிரைநேர்நேர், கூவிளந்தண்பூ.<br>நேர்நேர்நிரைநேர், தேமாநறும்பூ.<br>நிரைநேர்நிரைநேர், புளிமாநறும்பூ.<br>நிரைநிரைநிரைநேர், கருவிளம்நறும்பூ.<br>நேர்நிரைநிரைநேர், கூவிளம்நறும்பூ. | எனும் வாய்ப்பாடுள்ளனபூச்சீரெனப்படும். |

இப்பூச்சீரெட்டும் வெண்பாவீற்றசையமற்றப்பா இனங்களுட் குற்றுகரம் வந்தவிடத்து வரப்பெறும்.

16.—தளையாவதியாது?

சீரோடு சீரொன்றுவதே தளையெனப்படும்.

17.—தளையெத்தனைவகைப்படும்?

நேரொன்றாசிரியத்தளை, நிரை யொன்றாசிரியத்தளை, இயற்சீர்வெண்டளை, வெண்சீர்வெண்டளை, கலித்தளை, ஒன்றியவஞ்சித்தளை, ஒன்றாதவஞ்சித்தளை யெனவெழுவகைப்படும்.

18.—நேரொன்றாசிரியத்தளையாவதியாது?

மா முன் நேர் வருவன நேரொன்றாசிரியத்தளை யெனப்படும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (உ-ம்.) | வீ | ரங் | கொண் | டார். | இஃது மாமுன் நேர் வந்ததைக்காண்க. |
| | தே | மா | தே | மா. | |
| | நேர் | நேர் | நேர் | நேர். | |

19.—நிரையொன்றாசிரியத்தளையாவதியாது?

விளம்முன்நிரை வருவன நிரையொன்றாசிரியத்தளை யெனப்படும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (உ-ம்.) | வண் | டுறை | கம | லம். | இஃது விளம் முன் நிரைவந்ததைக் காண்க. |
| | கூ | விளம் | புளி | மா. | |
| | நேர் | நிரை | நிரை | நேர். | |

இந்நேரொன்றாசிரியத் தளையும் நிரையொன்றாசிரியத்தளையும் ஆசிரியப்பாவெனு மகவலுரிச்சீரெனப்படும்.

20.—இயற்சீர்வெண்டளையாவதியாது?

மாமுன் நிரையும் விளம் முன் நேரும் வருவன இயற்சீர் வெண்டளையெனப்படும்.

| | | |
|---|---|---|
| (உ-ம்.) | மா யக் கவ ரு டல். / தே மா புளி மாங்காய். / நேர் நேர் நிரை நேர்நேர். | இஃது மாமுன் நிரைவந்ததைக் காண்க. |
| | மா வினு லோங் கு சீர். / கூ விளம் கூ விளம். / நேர் நிரை நேர் நிரை. | இஃது விளம் முன் நேர்வந்ததைக்காண்க. |

21.—வெண்சீர்வெண்டளையாவதியாது?

காய் முன்நேர்வருவனவெண்சீர்வெண்டளையெனப்படும்.

| | | |
|---|---|---|
| (உ-ம்.) | கங் கை நீ ரா டிவ ள்ர் / தே மாங் காய் கூ விளம் காய் / நேர் நேர் நேர் நேர் நிரை நேர் | இஃது காய்முன் நேர் வந்ததைக் காண்க. |

இவ்வியற்சீர் வெண்டளையும் வெண்சீர் வெண்டளையும் வெண்பாவுரிச்சீரெனப்படும்.

22.—கலித்தளையாவதியாது?

காய்முன் நிரைவருவனகலித்தளை யெனப்படும்.

| | | |
|---|---|---|
| (உ-ம்.) | சரு மனுக் குங் கருத் திது வே / கரு விளங் காய் கரு விளங் காய் / நிரை நிரை நேர் நிரை நிரை நேர் | இஃது காய் முன்நிரைவந் ததைக்காண்க |

இக்கலித்தளை கலிப்பாவுரிச்சீரெனப்படும்.

23.—ஒன்றியவஞ்சித்தளையாவதியாது?

கனிமுன் நிரைவருவன வொன்றிய வஞ்சித்தளை யெனப்படும்.

| | | |
|---|---|---|
| (உ-ம்.) | வள வய விடைக் கள வயின் மகிழ் | இஃதுகனி |
| | கரு விளங் கனி கரு விளங் கனி | முன் நிரைவந் |
| | நிரை நிரை நிரை நிரை நிரை நிரை | ததைக்காண்க |

24.—ஒன்றாதவஞ்சித்தளையாவதியாது?

கனிமுன் நேர்வருவனவொன்றாத வஞ்சித்தளையெனப்படும்.

| | | |
|---|---|---|
| (உ-ம்.) | பூந் தா மரைப் போ தில மர | இஃது கனிமு |
| | தே மாங் கனி கூ விளங் கனி | ன்நேர்வந்ததை |
| | நேர் நேர் நிரை நேர் நிரை நிரை | க்காண்க. |

இவ் வொன்றிய வஞ்சித்தளையு மொன்றாத வஞ்சித்தளையும் வஞ்சியுரிச்சீரெனப்படும்.

25.—அடியாவதியாது?

தளைகளை யடுத்து நடப்பதே யடியெனப்படும்.

26.—அடிகளெத்தனைவகைப்படும்?

குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடியென வைந்துவகைப்படும்.

27.—குறளடியாவதியாது?

இருசிருடைத்தாய நடைபெற்றுவருவன குறளடியெனப்படும்.

| | | |
|---|---|---|
| (உ-ம்.) | அர வணிந் தவ னற் புத. | இஃது இருசிருடைத் |
| | நிரை நிரை நிரை நேர் நிரை. | தாய நடைபெற்றுவ |
| | கரு விளங் கனி கூ விளம். | ந்ததைக்காண்க. |

28.—சிந்தடியாவதியாது?

முச்சிருடைத்தாயநடைபெற்றுவருவன சிந்தடியெனப்படும்.

(உ-ம்.) மண்ணிழந்து போந்து வனநண்ணி.
நேர் நிரை நேர் நேர்நேர் நிரைநேர்நேர்
கூ விளங் காய் தேமா புளிமாங்காய்.
இஃதுமுச்சீருடைத்தாய நடைபெற்று (வந்ததைக்காண்க.)

29.—அளவடியாவதியாது?

நாற்சீருடைத்தாய நடைபெற்று வருவன் வளவடியெனப் படும்.

(உ-ம்.) மூலமே யென்றகரி முன்வந் திடர்தொலைத்து.
நேர்நிரை நேர்நிரைநேர் நேர்நேர் நிரைநிரைநேர்.
கூவிளம் கூவிளங்காய் தேமா கருவிளங்காய்.
இஃது நாற்சீருடை (த்தாயநடைபெற்றுவந்ததைக்காண்க.)

இச்சிந்தடியு மளவடியும் வெண்பாவடியெனப்படும்.

30.—நெடிலடியாவதியாது?

ஐஞ்சீருடைத்தாயநடைபெற்றுவருவன நெடிலடியெனப்படும்

(உ-ம்.) அன்று தூதுகொண் டிலங்கைதீ
நேர்நேர் நேர்நிரை நிரைநேர்நேர்
தேமா கூவிளம் புளிமாங்காய்
விளைத்தவ ரைவர்க்
நிரைநிரை நேர்நேர்
கருவிளம் தேமா.
இஃதுஐஞ்சிருடைத்தாயநடைபெற்றுவந்ததைக்காண்க,

31.—கழிநெடில்டியாவதியாது?

ஐஞ்சிருக்கு மிக்கசீருடைத்தாயநடைபெற்றுவருவன கழி நெடி லடி யெனப்படும்.

(உ-ம்) செஞ்சொன்முனி சஞ்சயனுக்
நேர்நேர்நிரை நேர்நிரைநேர்
தேமாங்கனி கூவிளங்காய்
யொமுரைத்தக் கருமமுமுன்.
நிரைநிரைநேர் நிரைநிரைநேர்.
கருவிளங்காய் கருவிளங்காய்.
இஃது அறுசீருடைத்தாயநடைபெற்று வந்ததை காண்க.

சென்ற காலை.
நேர்நேர் நேர்நேர்.
தேமா தேமா.

| | |
|---|---|
| இந்த வண்ண முறைசெய்து மன்னரு<br>நேர்நேர் நேர்நேர் நிரைநேர்நேர் நேர்நிரை<br>தேமா தேமா புளிமாங்காய கூவிளம்<br>மிராச ராசனு மிருக்கவே.<br>நிரைநேர் நேர்நிரை நிரைநிரை.<br>புளிமா கூவிளம் கருவிளம். | இஃது எழுச<br>ருடைத்தாய<br>நடைபெற்று<br>வந்ததைக்கா<br>ண்க. |

| | |
|---|---|
| வீரத்தை யணிமுழுவா ருமைபங்<br>நேர்நேர்நேர் நிரைநிரைநேர் நிரைநேர்<br>தேமாங்காய் கருவிளங்காய் புளிமா<br>காளர் விளங்கருணை சித்தரியாம்.<br>நேர்நேர் நிரைநிரைநேர் நேர்நிரைநேர்<br>தேமா கருவிளங்காய் கூவிளங்காய்<br>விளம்பக் கேளா<br>நிரைநேர நேர்நேர்<br>புளிமா தேமா. | இஃதெண்சிரு<br>டைத்தாயந<br>டைபெற்று<br>வந்ததைக்<br>காண்க. |

எண்சீருக்குமிக்கசீருமுள்ளன.

32.—தொடையாவதியாது?

பதங்களைத் தொடுக்கப்படுவதே தொடையெனப்படும்.

33.—தொடையெத்தனைவகைப்படும்?

எதுகைத்தொடை, மோனைத்தொடை யெனவிருவகைப்படும்.

34.—எதுகைத் தொடையாவதியாது?

அடிகடோறு முதலெழுத்தினளபொத்து, 2, 3, ம், அதற்குமேலுள்ள வெழுத்துக்களையு மொன்றிவருவனவெதுகைத் தொடையெனப்படும்.

(உ-ம்.) ஆடினரமுதனரமுதவேழிசைப்
பாடினரமுழ்தனர்பரிந்தகோதையர்
ஊடினரமுதனருயிரின்னபரைக்
கூடினரமுதனர்குழாங்குழாங்கொடே.

இஃது அடிக
டோறு முதலெ
ழுத்தினளபொ
த்து, 2-முதல்
(6-எழுத்துகளொன்றிவந்ததைக்காண்க.

35.—எதுகைத்தொடையெத்தனைவகைப்படும்?

இனவெதுகைத்தொடை, ஆசெதுகைத்தொடை யெனவி ருவகைப்படும்.

36.—இனவெதுகைத்தொடையாவதியாது?

அடிகடோறு முதலெழுத்தினளபொத்து, 2, 3,ம் எழுத்துக்களு மொரேவரிசையெழுத்துக்களாகவரினினவெதுகைத்தொடையெனப்படும்.

(உ-ம்.) ஆடினர்
பாடினர்
ஊடினர்
கூடினர்

இஃது அடிகடோறு முதலெழுத்தினளபொத்து மற்றையவெழுத்துக்களொரேவரிசையெழுத்துக்களாக வந்ததைக்காண்க.

37.—ஆசெதுகைத்தொடையாவதியாது?

அடிகளின் முதலெழுத்துக ணீங்குதலாக மற்றையவெழுத்துக்கள் வல்லினம், மெல்லினம், இடையினமெனு மூவினங்களினதனதனினவெழுத்துக்களே யொன்றிவருவன வாசெதுகைத்தொடையெனப்படும்.

(உ-ம்) கற்பகக்கொடியினற் காந்தியன்னவ
ளிச்சகந்தன்னிலோ௳ழிவியம்வண்ணனை
மிக்ககக்கொழுநனுய்மேவுவனென்றசொற்
பட்டகமெய்திதீப்பாய்ந்தனள்கற்பினுள்.

இஃதுஅடி
களி னிர
ண்டாமெ
ழுத்துக்

கள்வல்லினவெழுத்துக்களாகவந்ததைப்போன்மற்ற வினங்களுக்கு மிவ்வாறுவருவதுள; ஆதலாலீதாசெதுகைத்தொடையெனப்படும்

38.—மோனைத்தொடையாவதியாது?

முதற்சீருக்கப்பால் 2, 3 அல்லது 4-ம், சீரிலவ்வவ் வடிகளின் முதலெழுத்துக்க ளவ்வெழுத்துக்களின் மோனைக்குரிய வெழுத்துக்களோன்றிவருவன மோனைத்தொடையெனப்படும்

(உ-ம்.) வானுயர்வானவர் பதியயனிறைஞ்சும் அக்
கானுயர்தாமகற்களபமார்பமுந்
தானுயர்வாட்கைதிகிரிதண்சங்குவின்
மானுயர்மாதவன்மலர்ப்பதம்வணங்குவாம்.

இஃது முதலடியினிரண்டாஞ்சீரிலம்முதலடிமுதலெழுத்தோன்றிவந்ததும், இரண்டாமடியின் மூன்றாஞ்சீரிலவ் விரண்டாமடி முதலெழுத்தொன்றிவந்ததும், மூன்றாமடியினன்காஞ்சீரி லம்மூன்றாமடிமுதலெழுத்தொன்றிவந்ததும், நான்காமடியின் முதனான்குசீரிலு மந்நான்காமடி முதலெழுத்தொன்றிவந்ததுங்காண்க.

39.—மோனைத்தொடையெத்தனைவகைப்படும்?

இணைமோனைத்தொடை, பொழிப்புமோனைத்தொடை, ஒரூஉமோனைத்தொடை, கூழைமோனைத்தொடை, மேற்கதுவாய்மோனைத்தொடை, கீழ்க்கதுவாய்மோனைத்தொடை, முற்றுமோனைத்தொடை யென வெழுவகைப்படும்.

40.—இணைமோனைத்தொடையாவதியாது?

முதற்சீரின் முதலெழுத்துமற்றசீர்களினின்றியிரண்டாஞ்சீரிலொன்றிவரவிணைமோனைத்தொடையெனப்படும்.

(உ-ம்.) வானுயர் வானவர் பதியயனிறைஞ்சும் அக்.

இஃது முதற்சீரின் முதலெழுத்து மற்றசீர்களினின்றி யிரண்டாஞ்சீரிலொன்றிவந்ததைக்காண்க.

41.—பொழிப்புமோனைத் தொடையாவதியாது?

முதற்சீரின் முதலெழுத்து மற்றசீர்களினின்றிமூன்முஞ் சீரிலொன்றிவரப்பொழிப்புமோனைத்தொடையெனப்படும்.

(உ-ம்.) கானுயர்தாமநற்களபமார்பமும்.

இஃது முதற்சீரின்முதலெழுத்து மற்ற சீர்களினின்றி மூன்முஞ்சீரிலொன்றிவந்ததைக்காண்க.

42.—ஒரூஉமோனைத்தொடையாவதியாது?

முதற்சீரின் முதலெழுத்து மற்றசீர்களினின்றி நான்காஞ் சீரிலொன்றிவர வொரூஉ மோனைத்தொடையெனப்படும்.

(உ-ம்.) தானுயர் வாட்கதை திகிரிதண்சங்குவின்.

இஃது முதற்சீரின் முதலெழுத்து மற்றசீர்களினின்றி நான்காஞ்சீரிலொன்றிவந்ததைக்காண்க.

43.—கூழைமோனைத்தொடையாவதியாது?

முதற்சீரின்முதலெழுத்துக் கடைச்சீரினின்றிமற்றசீர்களி னொன்றி வரக்கூழைமோனைத்தொடையெனப்படும்.

[உ-ம்.) ஆடினர் அழுதனர் அமுத எழிசை.

இஃது முதற்சீரின் முதலெழுத்துக் கடைச்சீரினின்றிம ற்றசீர்களினென்றிவந்ததைக்காண்க.

44.—மேற்கதுவாய் மோனைத்தொடையாவதியாது?

முதற்சீரின் முதலெழுத்து இரண்டாஞ்சீரினின்றிமற்றசீர்களிெனொன்றிவரமேற்கதுவாய்மோனைத்தொடையெனப்படும்.

(உ-ம்.) தேன்கு கங்கைத் திருமுடிச் செங்கணான்.

இஃது முதற்சீரின் முதலெழுத் திரண்டாஞ்சீரினின்றி மற்ற சீர்களிெனொன்றிவந்ததைக்காண்க.

45.—கீழ்க்கதுவாய்மோனைத்தொடையாவதியாது?

முதற்சீரின் முதலெழுத்தீற்றிரண்டாஞ்சீரினின்றி மற்றசீர்களிெனொன்றிவரக்கீழ்க்கதுவாய்மோனைத்தொடையெனப்படும்.

(உ-ம்.) மருளு மன்னவற் கியான்சொலும் வாசகம்.

இஃது முதற்சீரின் முதலெழுத்தீற்றிரண்டாஞ்சீரினின்றிமற்றசீர்களிெனொன்றிவந்ததைக்காண்க.

46.—முற்றுமோனைத்தொடையாவதியாது?

முதற்சீரின் முதலெழுத்து 2, 3, 4 சீர்களிலுமொன்றிவரமுற்று மோனைத்தொடையெனப்படும்.

(உ-ம்.) மானுயர் மாதவன் மலர்ப்பதம் வணங்குவாம்.

இஃது முதற்சீரின் முதலெழுத்து மற்ற 2, 3, 4 சீர்களிலுமொன்றிவந்ததைக்காண்க.

47.—வேற்றுத்தொடைகளாவதியாது?

அளபெடைத்தொடை, அடிமுரண்டொடை, இயைபுத்தொடை, அந்தாதித்தொடை, இரட்டைத்தொடை, செந்தொடை, யெனுமாறும் வேற்றுத்தொடைகளெனப்படும்.

48.—அளபெடைத்தொடையாவதியாது?

அடிகளின் சீரிலோசையை நிரப்பவதிகப்பட்டிருக்குமெழுத்தே யளபெடைத்தொடையெனப்படும்.

(உ-ம்.) ஓஒதல் வேண்டுமொளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர்

இஃது அடிகளின் முதற்சீரிலுயிரெழுத்துக ளளபெடுதுவந்ததைக்காண்க.

மடங்ங்கலந்த மனனே களத்து
விடங்ங்கலந்தானை வேண்டு

இஃது அடிகளின் முதற்சீரிலொற்றெழுத்துக ளளபெடுத்துவந்ததைக்காண்க.

இஃது மோனைத்தொடையின் விகற்பத்தை யொப்ப அடிகளின் முதற்சீரி லளபெடுக்கிலடியளபெடைத்தொடையென்றும், இரண்டாஞ்சீரி லளபெடுக்கி லிணையளபெடைத்தொடையென்றும், மூன்றாஞ் சீரிலளபெடுக்கிற்பொழிப்பளபெடைத்தொடையென்றும், நான்காஞ்சீரி லளபெடுக்கி லொரூஉ வளபெடைத்தொடையென்றும், முதன் முச்சீரிலளபெடுக்கிற்கூழையளபெடைத்தொடையென்றும், இரண்டாஞ்சீரினின்றி மற்ற சீர்களிலளபெடுக்கின்மேற்கதுவாயளபெடைத்தொடையென்றும், ஈற்றிரண்டாஞ்சீரினின்றிமற்ற சீர்களிலளபெடுக்கிற்கீழ்க்கதுவாயளபெடைத்தொடையென்றும், முதனான்குசீர்களிலுமளபெடுக்கின்முற்றுமளபெடைத் தொடையென்றுஞ்சொல்லப்படும்.

49.—அடிமுரண்டொடையாவதியாது?

அடிகடோறுமெதுகைத் தொடையிலொவ்வாது சொற்கண் மறுதலைப் படத்தொடுப்பதேயடிமுரண்டொடையெனப்படும்.

[உ-ம்] இருள்பரந்தன்ன வெழுநீர்மருங்கி
னிலவுகுவித்தன்ன வெண்மணனிளிடை
யிரும்பினன்ன வெழிற்கோட்டுப்புன்னை
பொன்னினன்ன பொலிதாதிறைக்குஞ்
சிறுகுடிப்பரதவர் தேமொழி
பெருமதர்மழைக்கணும் பேரமர்செயுமே.

இஃது அடிகடோறுமெதுகையிலொவ்வாது மறுதலைப் படத்தொடுத்து வந்ததைக் காண்க.

50.—அடியியைபுத் தொடையாவதியாது?

அடிகடோறு மிறுதிக்கணின்ற வெழுத்தானுஞ் சொல் லானு மொன்றிவரத் தொடுப்பதடியியைபுத்தொடை யெனப் படும்.

[உ-ம்] இன்னகைத்துவர்வாயின்சொலுமணங்கே
நன்மாமேனிநறுஞ்சுணங்கணங்கே
அரிமதர்மழைக்கணுமணங்கே
திருநுதற்பொறித்த திலதமுமணங்கே.

இஃது இறுதிக்கண் அணங்கேயெனுஞ் சொல்லாலொ ன்றிவந்ததைக் காண்க.

51.—அந்தாதித் தொடையாவதியாது?

செய்யுட்களினிற்றடியி னிறுதிக்கணின்ற எழுத்து, அசை சீர், அடிகளானும் வேற்றடிக் காதியாக வரத்தொடுப்ப தந்தாதி த்தொடை யெனப்படும்.

| | |
|---|---|
| [உ-ம்] கரைபொருதொழுகுங் காவிரியாறே<br>யாற்றிடைக்கிடப்பதோரைந்தலையரவே<br>யரவஞ்சுமப்பதோ ரஞ்சனமலையே<br>யம்மலைபூத்ததோரரவிந்தவனமே<br>யரவிந்தமலர்தொறுமதிசயமுளவே | இஃது அடிக<br>ளினீற்றின்சீ<br>ரால்வேற்றடி<br>க்காதியாகவந்<br>ததைகாண்க. |

இஃதேபோல் எழுத்து, அசை, அடிகளானும் வேற்றடிக் காதியாக வருவதுமுள.

52.—இரட்டைத்தொடையாவதியாது?

அடிமுழுது மொரேமொழியாய் வரத்தொடுப்பதடுக்குத் தொடையல்லதிரட்டைத் தொடை யெனப்படும்.

[உ-ம்] ஒக்குமே யொக்குமே யொக்குமே யொக்கும்
விளக்கினிற் சீறெரியொக்குமே யொக்கும்
குளக்கொட்டிம்பூவினிறம்.

இஃது அடிகளின் முதலடி யொரேமொழியா யடுக்கிவந்ததைக் காண்க.

53.—செந்தொடையாவதியாது?

மோனைமுதலியதொடையுந் தொடைவிகற்பமும் போலின்றி வேறுபடத் தொடுப்பது செந்தொடை யெனப்படும்.

(உ-ம்.) பூத்தவேங்கை வியன்சினையேறி
மயிலின மகவுநாடன்
நன்னுதற்கொடிச்சி மனத்தகத்தோனே.

இஃது அடிகளின் மோனைகள் சிதறித்தொடைவிகற்பமுமாறுபட வந்ததைக் காண்க.

54.—மோனைக்குரிய எழுத்துக்களாவதியாது ?

அகரத்துக்கு அ, ஆ, ஐ, ஔ. ஆகாரத்துக்கு அ, ஆ, ஐ, ஔ. இகரத்துக்கு இ, ஈ, எ, ஏ. ஈகாரத்துக்கு இ, ஈ, எ, ஏ. உகரத்துக்கு உ, ஊ, ஒ, ஓ. ஊகாரத்துக்கு உ, ஊ ஒ, ஓ. எகரத்துக்கு எ, ஏ, இ, ஈ. ஏகாரத்துக்கு எ, ஏ, இ ஈ. ஐகாரத்துக்கு- அ, ஆ, ஐ, ஔ. ஒகரத்துக்கு - ஒ, ஓ, உ, ஊ. ஓகாரத்துக்கு- ஒ, ஓ, உ, ஊ. ஔகாரத்துக்கு-அ ஆ, ஐ, ஔ. எழுத்துக்களும், இவ்வெழுத்துக்களேறியவுயி ர்மெய்யெழுத்துக்களும், சகரத்துக்கு - த, ச. தகரத்துக்கு ச, த. ஞகரத்துக்கு - ஞ, ந. ஞகரத்துக்கு - ந, ஞ. மகரத் துக்கு - வ, ம. வகரத்துக்கு - ம, வ. எழுத்துக்களு மிவ்வெ ழுத்துக்களின் வரிசையுமே, மோனைக்குரிய வெழுத்துக்களெ னப்படும்.

உறுப்பியல்.

முற்றிற்று.

---

## இரண்டாவது.

# யாப்பியல்.

---

I.—யாப்பியலாவதியாது?

உறுப்புகளொன்றுபடப் புணர்ந்து கவி, கவிதை, செய் யுள், தமிழ், தூக்கு, தொடர்பு, பாட்டு, யாப்பு, பா, வென் னும் பலபெயரானடந்து வருமியலைக் கூறுவதியாப்பியலெனப் படும்.

2.—யாப்பியலெத்தனைவகைப்படும்?

பா, பாவினங்களெனவிருவகைப்படும்.

3.—பாவெத்தனைவகைப்படும்?

ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா வெனநான்குவகைப்படும்.

இஃது தத்தமக்குரிய தளை பிறழாது பெரும்பாலும் வரப்பெறும்.

4.—பாவினங்களெத்தனைவகைப்படும்?

துறை, தாழிசை, சுரிதகம், விருத்தம்என நான்குவகைப்படும்.

இஃது பலதளைகளும் தழுவிவருவனவாம்.

---

## ஆசிரியப்பா.

5.—ஆசிரியப்பாவாவதியாது?

மாச்சீர், விளச்சீரெனும் நாற்சீரான் வரப்பெறி னாசிரியப்பாவல்லதகவலெனப்படும்.

6.—ஆசிரியப்பாவெத்தனைவகைப்படும்?

நேரிசையாசிரியப்பா, நிலைமண்டிலவாசிரியப்பா, அடிமறிமண்டிலவாசிரியப்பா, இணைக்குறளாசிரியப்பா வென நான்குவகைப்படும்.

7.—நேரிசையாசிரியப்பாவாவதியாது?

அடிகடோறும் நாற்சீருடைத்தாயதாயீற்றுக்கயலடி முச்சீரான் வரப்பெறினேரிசையாசிரியப்பா வெனப்படும்.

(உ-ம்.) மாநீர்த்தத்தின் மலர்த்தாமரைமேன்
மாவுறைகாஞ்சி வளம்பதியதனுண்
மாலினடிவண்டேனே
மாவெனவருந்தார் மாந்தராகாரே

இஃது அடிகடோறும் நாற்சிருடைத்தாயதாயீற்றக்கயலடிமுச்சிரான்வந்ததைக்காண்க.

8.—நிலைமண்டிலவாசிரியப்பாவாவதியாது?

அடிகடோறும் நாற்சிருடையனவாய்த் தம்முளொத்து நிலம்போலச் சமனாய் நடப்பனநிலைமண்டிலவாசிரியப்பா வெனப்படும்.

(உ-ம்.) வானுறநிமிர்ந்தனை வையகமளந்தனைப்
பான்மதிவிடுத்தனை பல்லுயிரோம்பினை
நீனிறவண்ணனி னிரைகழறொழுதனம்.

இஃது அடிகடோறும் நாற்சிருள்ளனவாய் நிலம்போலச் சமனாய் நடந்துவந்ததைக்காண்க.

9.—அடிமறிமண்டிலவாசிரியப்பாவாவதியாது?

அடிகடோறு முதல், இடை, கடை மறிந்துமோசையுஞ் சீரும் பொருளும் பிறழாதுவருவன, அடிமறிமண்டிலவாசிரியப்பாவெனப்படும்.

(உ-ம்.) சூரல்பம்பியசிறுகான்யாறே
சூரரமகளிராரணங்கினரே
வாரலெனினே யானஞ்சுவலே
சாரனாட நீவரலாறே.

இஃது அடிகளின் முதலிடைகடை மறிந்துமோசையுஞ் சீரும் பொருளும் பிறழாதுவந்ததைக்காண்க.

10. இணைக்குறளாசிரியப்பாவாவதியாது?

முதலடியு மீற்றடியும் நாற்சீராகி யிடை யடிகளிரண்டும் பலவுங் குறளடியானுஞ் சிந்தடியானும் வரப்பெறினிணைக்குற ளாசிரியப்பாவெனப்படும்.

(உ-ம்.) அருமறைமுதலோயயில்வேல்முருக
வருவாய்முருக
மயின்மேல்முருகவருவாய்க்
குயின்மொழிதேவக்குஞ்சரிதவனே.

இஃது முதற்கடையடிகணாற் சீராகியிடையிற் குறளடி சிந்த டியானும் வந்ததைக் காண்க.

11.—பாவினங்களுள்-ஆசிரியத்துறையாவதியாது?

நான்கடியாகி யீற்றுக்கயலடி குறைந்து வருவனவும், நான் கடியாகி யீற்றுக்கயலடி குறைந்து மிடைமடக்காய் வருவன வும், நான்கடியாகியிடையிடை குறைந்து வருவனவும், நான் கடியாகி யிடையிடை குறைந்து மிடைமடக்காய் வருவனவு மாசிரியத்துறை யெனப்படும்.

(உ-ம்.) கரைபொரு கான்யாற்றங்கல்லக ரெம்முள்ளின்வருவிரான்
அரையிருள் யாமத்தடுபுலியே றஞ்சியகன்றுபோக
நரையுருமின்னலின் கைவேலசையவோ
வரையரமங்கையர் வெளவுதலஞ்சுதும் வாரலையோ

இஃது நான்கடியாகி யீற்றுக்கயலடி குறைந்தாசிரியத் துறை யில் வந்ததைக்காண்க.

(உ-ம்.) கண்டோரை மொழியார்மயலிடைப்படுவோர்தங்கதியா மென்ன
வண்டேளர்பூந்தார்வளங்கெழுசெம்பூட்சேய்வடிவேபோலத்
தண்டளிர்ப்பூம்—பிண்டித்தழையேந்திவந்துநம்+பண்டைப்
பதம்வினவிப்பாங்குபட மொழிந்துப்படர்ந்தோனன்றே.

இஃது நான்கடியாகி யீற்றுக் கயலடி குறைந்து மிடைமடக்கா யாசிரியத்துறையில் வந்ததைக்காண்க.

(உ-ம்.) கொன்றூர்ந்தமைந்தக்குருமுகத்தெழிலிறக்—குறுகிக்
கோட்டணி—யிருந்தாட்பெருங்கைக்—குன்றுமென்ன—நின்
றூர்த்தோங்கிக்—குமுறுகின்றன கொடுந்தொழில் வேழம்—
வென்றூர்ந்தமைந்த—விளங்கொளியிளம்பிறைத்—
துளங்குவாளிலங்-கெயிற்றழலுளைப்பரூஉத்தா—னதிரும்வா
னெனவெதிருங்கூற்றெனச்—சுழலாநின்றன சுழிக்கண்யாளி—
சென்றூர்ந்தமைந்தச்—சிறுநுதிவள்ளுகிர்ப்—பொறியெ
றழ்த் தெருள்வலிப்—புலவுநாறல்வாய்ப்—புனலாமெனக்
கனலாமெனப்—புகையாநின்றனபுலிமானேற்று—
மென்றுக்கிளவயிவை—யியங்கவினைந்திறத்—தினிவர
வேண்டலந்தனிவரவெனத்தலை—விலக்கவினவமிக—வருமிது
வென்னென—நாளுங்கரவிறக்—கற்றோரோதுங்கற்பன்றே.

இஃது நான்கடியா யிடையிடைகுறைந்து முதலடியுமூன்றும டியும் பதினான்குசீராயல்லாத வடிகளிரண்டும் பதினாறு சீராயாசிரியத்துறையில் வந்ததைக் காண்க.

(உ-ம்.) இரங்குமணிக்குழலா யின்னிசையாழ்தேனும்
அரங்கமணிப்பொழிலாவாடும்போலுமிளவேனில்
அரங்கமணிப்பொழிலா வாடுமாயின்— [வேனில்
இரங்கொண்மணந்தகன்றார் நெஞ்சமென் செய்ததிள

இஃது நான்கடியா யிடையிடை குறைந்திடைமடக்கா யாசிரியத்துறையில் வந்ததைக் காண்க.

12.—ஆசிரியத்தாழிசையாவதியாது ?

மூன்றடியாய்த் தம்முளொத்து ஆசிரியத்துறையிற்றாழ்ந்தவோசையான் வரப்பெறினாசிரியத் தாழிசை யெனப்படும்.

(உ-ம்.) உண்டுகளித்தே யொளிவளைசோரக்
கண்டுபோலனமுங்கொண்டிவளிணைமேற்
கண்டுயிலாது தொண்டைவாய்ச்சுவைப்பன்.

இஃது மூன்றடிகளுந்தம்மிலொத்து ஆசிரியத்துறையிற் சூழ்ந்தவோசையைப்பெற்று வந்ததைக் காண்க.

13.—ஆசிரியச்சுரிதகமாவதியாது ?

அடிகளின் சீர்கள்குறைந்து வருவன வாசிரியச் சுரிதக மெனப்படும்.

(உ-ம்.) திருநாரணனைச்சேர்ந்தனஞ்
சரணாரவிந்தந்தஞ்சமென்றிரந்தே.

இஃது ஈற்றடிக்கு முதலடி யோர்சீர்குறைந் தாசிரியத்துறையில் வந்ததைக் காண்க.

14.—ஆசிரியவிருத்தமாவதியாது?

ஐஞ்சீருக்குமிக்கன கழிநெடிலடி யாசிரிய விருத்தமெனப்படும்.

(உ-ம்.) தேடுகின்றனை யைம்பொறி களுக்கிரை தேடியுங் காணமல், வாடுகின்றனை வீடுசென் றென்றினி மருவுவைமடநெஞ்சே, யாடுகின்றிலை யழுகிலை தொழுகிலை யரங்கனைக் கரங்கூப்பிப், பாடுகின்றிலை நினைகிலைப் பதின்மர்தம் பாடலின் படியாயே.

இஃது அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தமாக வந்ததைக்காண்க.

(உ-ம்.) ஆயினை மனையைச் சேயினைப் பிதாவை யனத்தினைத்தனத்தினை விரும்பும், பேயினை மறந்து நோயினை மூப்பைப் பிறப்பினையிறப்பினைத் துடைப்பீர், ஆயனைமுளரி வாயனை யெங்க ளமலனைக் கமலனைப் பய

ந்த, தாயனை நெடிய மாயனை வடபாற் றரங்கனைய
ரங்கனைத் தொழுமே.

இஃது எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தமாக வந்ததை
க்காண்க.

(உ-ம்.) இருங்குங் குமத்தோ ளரங்கேசர் முன்னு ளிலங்கா
புரங்காவ லன்காலி னுல்வீழ்
கருங்குன்று போன்மண் முகங்குத்தி வீழக் கண்டா
ரெனக்கின்று தண்டா ரளித்தான்
மருங்கெங்கு வம்போது வார்வா யடங்கும்வாடைக்கு
நிலமங்கை யாடைக்கு நோகேன்
நெருங்குந் தனஞ்சந் தனம்பூ சலாகு நீளாதி
ராமையன் மீளா திராதே.

இஃது எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தமாக வந்ததைக்
காண்க. எண்சீருக்குமிக்க சீருமுள்ளன.

15.—ஆசிரியப்பாவுக்குரியவோசையாவதியாது?

அகவலோசையெனப்படும்.

16.—அகவலோசையெத்தனைவகைப்படும்?

ஏந்திசையகவல், தூங்கிசையகவல், ஒழுகிசையகவலென
மூவகைப்படும்.

17.—ஏந்திசையகவலாவதியாது?

நேர், நேரெனும் வாய்ப்பாட்டின் வெண்சீர்வெண்டளையா
ன்வரும் யாப்பையேந்திசையகவலெனப்படும்.

(உ-ம்.) ஆதிநாதனம்பார்வேணி
சோதிகன்னைதோன்றும்பாதன்

இஃது நேர் நேரெனும் வாய்ப்பாட்டின் வெண்சீர் வெண்ட
ளையான் வந்ததைக்காண்க,

18.—தூங்கிசையகவலாவதியாது?

நிரை நிரையெனும் வாய்ப்பாட்டினியற்றளையான் வரும் யாப்பைத் தூங்கிசையகவலெனப்படும்,

(உ-ம்.) அகத்துளம் விரிவுறவலர்மணிதலத்தின்.

இஃது நிரை நிரையெனும்வாய்ப்பாட்டினியற்றளையான்வந்தைதக்காண்க.

19.—ஒழுகிசையகவலாவதியாது?

நேர் நிரை, நிரைநேரெனும் வாய்பாட்டினியற்சீர் வெண்டளையான்வரும் யாப்பையொழுகிசையகவலெனப்படும்.

(உ-ம்.) சீரணிதலத்திற்சேர்ந்துறுமகிபன்.

இஃது நேர்நிரை, நிரைநேரெனும் வாய்ப்பாட்டினியற்சீர் வெண்டளையான் வந்ததைக்காண்க.

ஆசிரியப்பா
முற்றிற்று.

---

## வெண்பா.

---

20.—வெண்பாவாவதியாது?

தளைகட்பிறழாது முதலடியளவடியாயு மீற்றடி சிந்தடியாயுங் கடைச்சீர், காசு, பிறப்பென்னுங் குற்றியலுகரமாயும், நாண், மலரென்னுமசைச்சீருமாகிய வாய்ப்பாடுற்று, ஒன்றிரண்டுவிகற்பமாப் முடியின்வெண்பாவெனப்படும்.

21.—வெண்பாவெத்தனைவகைப்படும்?

குறள்வெண்பா, சிந்தியல்வெண்பா, நேரிசைவெண்பா, இன்னிசைவெண்பா, பஃறொடைவெண்பா வெனவைந்துவகைப்படும்.

22.—குறள்வெண்பாவாவதியாது?

முதலடியளவடியல்லாற் சிந்தடியாயுமிரண்டாமடி சிந்தடியல்லாற் குறளடியாயு மீற்றசை குற்றியலுகரவாய்ப்பாடல்லதசைச்சீராலமைந்து, ஒன்றிரண்டுவிகற்பங்களான் முடியிற்குறள்வெண்பாவெனப்படும்.

[உ-ம்.] இன்சொற்றுவர் வாயிவணமைக்கைத்தாலும்
வன்சொற்பகரேன் மறந்து.

இஃது முதலடி அளவடியாய் மீற்றடி சிந்தடியாயுங் குற்றியலுகரவாய்ப்பாட்டாலமைந்து, இன்சொற், வன்சொற் என்னுமொரேவிகற்பமாய்வந்ததைக்காண்க.

(உ-ம்.) சைவசமயநெறி சைவாகமத்தாய்ந்து
கொய்துரைப்பாம் வாஞ்சையுளங்கொண்டு.

இஃது சைவ, கொய்து, என்னும் விகற்பங்களிரண்டுளதாய் வந்ததைக்காண்க.

23.—சிந்தியல்வெண்பாவெத்தனைவகைப்படும்?

நேரிசைச்சிந்தியல்வெண்பா, இன்னிசைச்சிந்தியல்வெண்பாவென விரண்டுவகைப்படும்.

24.—நேரிசைச்சிந்தியல்வெண்பாவாவதியாது?

நேரிசைவெண்பாவேபோல விரண்டா மடியினிறுதியிற்றனிச்சொற்பெற்று 1, 2, அல்லது பலவிகற்பத்தானு மூன்றடியான்வருவன நேரிசைச்சிந்தியல்வெண்பாவெனப்படும்.

[உ-ம்.] செவ்வேலணிந்தானை தேவர்சிறைமீட்டானை
மைவேள்சுண்டொல்கும் வடிவானை —யெவவேளை
காணப்பெறுமோவென்கண்.

இஃது மூன்றடியாய்த்தனிச்சொற்பெற்று மூன்றுவிகற்பத்தான்வந்ததைக்காண்க.

25.—இன்னிசைச்சிந்தியல்வெண்பாவாவதியாது?

இன்னிசைவெண்பாவேபோலத் தனிச்சொலின்றி 1, 2, அல்லது பலவிகற்பத்தானு மூன்றடியான் வருவனவின்னிசைச்சிந்தியல்வெண்பாவெனப்படும்.

(உ-ம்.) நீலகண்டத்தானைநிருத்தம்புரிவானை
காலன்றனைக்கழலாற் காய்ந்தானைக் கண்டவர்க்கே
ஆணவம்போமென்றேயறி.

இஃது மூன்றடியாய்த்தனிச்சொலின்றி யிரண்டுவிகற்பத்தான்வந்ததைக்காண்க.

26.—நேரிசைவெண்பாவெத்தனைவகைப்படும்?

இருகுறணேரிசைவெண்பா, ஆசிடை நேரிசைவெண்பாவெனவிரண்டுவகைப்படும்.

27.—இருகுறணேரிசைவெண்பாவாவதியாது?

இரண்டுகுறள்வெண்பாவாய், முதற்குறள் வெண்பாவினெதுகைக்கேற்றத் தனிச்சொல்லாலடிநிரப்பிச்செப்பலோசைவழுவாது முதலிரண்டடியுமொருவிகற்பமாயுங் கடையிரண்டடியுமற்றொருவிகற்பமாயுமல்லது நான்கடியு மொரேவிகற்பமாய்வரினு மிருகுறண்ணேரிசைவெண்பாவெனப்படும்.

(உ-ம்.) தடமண்டுதாமரையின்றாதாடலவ
னிடமன்றிச்செல்வதனைக்கண்டு—பெடையொண்டு
பூழிக்கதவடைக்கும்புத்தூரேபொய்கடிந்
தூழிநடாயினனூர்.

இஃது இருகுறள் வெண்பாவாற் றனிச்சொற்பெற்றிரண்டுவி கற்பத்தான் வந்ததைக் காண்க.

(உ-ம்.) கூற்றங்குமைத்தகுரைகழற்காற்கும்பிட்டுத்
தோற்றந்துடைத்தோந்துடைத்தோமாற்--சீற்றஞ்செ
யேற்றினன் றில்லையிடத்தினனென்னினியாம்
போற்றினனல்கும்பொருள்.

இஃது இருகுறள்வெண்பாவாற் றனிச்சொற் பெற்றோரேவி கற்பத்தான் வந்ததைக் காண்க.

28.—ஆசிடைநேரிசைவெண்பாவாவதியாது ?

முதற்குறட்பாவினிறுதிக்கண் 1. 2. அசைகூட்டி 1. 2. விகற்பத்தானும் வரினாசிடை நேரிசைவெண்பா வெனப்படும்.

(உ-ம்.) இலங்கயிற் கண்ணிகுளைக் கென்காலைப்பற்றிப்
புலம்பியதன்றெடன்றுபுகல—விலங்கியய
னின்றுவருமற்றொருத்தி நின்கணவனோவென்ன
வன்று சிலம்பென்றாளவள்.

இஃது முதற்குறட்பாவினிறுதிக்கண், ஓரசையாலாசிட்டிரண் டுவிகற்பத்தான் வந்ததைக் காண்க.

(உ-ம்.) ஆனார்கொடியா ரருணாபுரிக்களியேம்
வானாடரேனோமதியற்றார்—மேனாளிற்
சும்மாகஞ்சாவிலையேதூளிடித்துத்தின்றாலுந்
தம்மாகஞ்சாவிலையேதான்.

இஃது முதற்குறட்பாவினிறுதிக்கண், ஈரசையாலாசிட்டிரண் டுவிகற்பத்தான் வந்ததைக் காண்க. இருகுறணேரிசை வெண்பா ஆசிடைநேரிசை வெண்பா விரண்டும் நேரிசை வெண்பா வெனப்படும்.

29.—இன்னிசைவெண்பாவாவதியாது ?

1. 2. விகற்பத்தானும் பலவிகற்பத்தானும் வந்து நான்கடியாய்த் தனிச்சொலின்றி நடப்பனவின்னிசை வெண்பாவெனப்படும்.

[உ-ம்.] நுகடீர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப்
பகடுநடந்தகூழ்பல்லாரோடுண்க
வகடுறயார்மாட்டுமில்லாதுசெல்வஞ்
சகடக்காற்போலவரும்

இஃது நான்கடியாய்த் தனிச்சொலின்றியொரே விகற்பத்தான்வந்ததைக் காண்க.

(உ-ம்.) இன்றுகொலன்றுகொ லென்றுகொலென்னாது
பின்றையேநின்றதுகூற்றமென்றெண்ணி
ஒருவுமின்றீயவையொல்லும்வகையால்
மருவுமின்மாண்டாரறம்.

இஃது நான்கடியாய்த் தனிச்சொலின்றியிரண்டுவிகற்பத்தான்வந்ததைக் காண்க. இவ் வெண்பாவி னிரண்டாமடியி னிறுதிக்கண், அசைகூட்டாது சவலைபெற்றுவரின் சவலைவெண்பா வெனப்படும்.

(உ-ம்.) அட்டாலும் பால்சுவையிற்குன்றா தளவல்ல
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலுமேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மைதரும்.

இஃது அசையின்றிச் சவலைபெற்றுவந்ததைக் காண்க.

30.—பஃறொடை வெண்பா வெத்தனை வகைப்படும்?

பஃறொடைநேரிசைவெண்பா, பஃறொடை இன்னிசை வெண்பா வெனவிரண்டுவகைப்படும்.

31.—பஃறொடைநேரிசை வெண்பாவாவதியாது?

நான்கடிக்கு மிக்கனவாய்த் தனிச்சொற்பெற்று பலவிகற்பங்கொண்டு வருவன பஃறொடைநேரிசை வெண்பா வெனப்படும்.

(உ-ம்.) பூமன்னுநான்முகத்தோன் புத்தேளிராங்கவர் கோன்
மாமன்னுசோதிமணிமார்பன்—றாமன்னும்
வேதவேதாந்தம் விளக்கஞ் செய்விந்துவுடன்
நாதநாதாந்த நடுவேதம்—போதத்தா
லாமளவுந்தேடவளவிறந்தவப்பாலைச்
சேமவொளியெவருந் தேறும்வகை
... ... ... ... ... ... ... ... ... ... ..
யென்கொண்டுபோற் றிசைப்பேனியான்.

இஃது நான்கடிக்கு மிக்கனவாய்த் தனிச்சொற்பெற்று பலவிகற்பங்கொண்டு வந்ததைக் காண்க.

32.—பஃறொடையின்னிசை வெண்பாவாவதியாது?

நான்கடிக்குமிக்கனவாய்த் தனிச்சொலின்றிப் பலவிகற்பங்கொண்டு வருவனபஃறொடை இன்னிசை வெண்பா வெனப்படும்.

(உ-ம்.) நமச்சிவாயவாஅழ்க நாதன்றாள்வாழ்க
இமைப்பொழுதுமென்னெஞ்சினீங்காதான்றாள்வாழ்க
கோகழியாண்ட குருமணிதன்றாள்வாழ்க
வாகமமாகி நின்றண்ணிப் பான்றாள்வாழ்க
வேகனநேக னிறைவனடிவாழ்க
.. ... ... ... ... ... ... ... ... ... ..

பல்லோருமேத்தப்பணிந்து,

இஃது நான்கடிக்கு மிக்கணவாய்த் தனிச்சொலின்றிப் பலவி கற்பங்கொண்டு வந்ததைக் காண்க.

33.—பாவினங்களுள்-வெண்பாத்துறை யெத்தனை வகைப்படும்?

வெண்செந்துறை, வெண்டுறையென விரண்டு வகைப்படும்.

34.—வெண்செந்துறையாவதியாது ?

விழுமியபொருளு மொழுகியலோசையு முடைத்தாயதா யிரண்டடிகளுந் தம்முளொத்து வருவன வெண்செந்துறை யெனப்படும்.

(உ-ம்.) ஆர்கலியுலகத்து மக்கட்கெல்லாம்
ஓதலிற்சிறந்தன் றொழுக்கமுடைமை.

இஃது விழுமியபொருளு மொழுகிய லோசையுமுடைத்தாய தாயிரண்டடிகளுந் தம்மிலொத்து வந்ததைக் காண்க.

35.—வெண்டுறையாவதியாது ?

மூன்றடி சிறுமையா யேழடிபெருமையாய் பின்பிற்சில வடிகள் சில சீர்குறைந்தும் வருவனவெண்டுறை யெனப்படும்.

(உ-ம்.) குழலிசைய வண்டினங்கள்கோழிலைய செங்காந்தட் குலேமேற்பாய, அழலெரியின் மூழ்கினவாலந்தோ வளியவென்றய ல்வாழ்மந்தி, கலுழ்வனபோனெஞ்சயர்ந்தகல்லருவிதூஉம், நிழல் வரை நன்னாட னீப்பனோ வல்லன்

இஃது நான்கடியாயிற் றிரண்டடிகளு மிரண்டு சீர்கள்குறைந்து வந்ததைக் காண்க.

36.—வெண்பாத்தாழிசைகளெத்தனை வகைப்படும் ?

தாழிசைக்குறள், செந்துறைசிதைவுத் தாழிசைக்குறள், குறட்டாழிசை, வெண்டாழிசை அல்லது வெள்ளொத்தாழிசை, வெளிவிருத்த வெண்டாழிசை யெனவைந்து வகைப்படும்.

37.—தாழிசைக் குறளாவதியாது?

நாற்சீரின்மிக்க பலசீரான்வந்த அடிகளிரண்டுளதா யீற்றடிகுறைந்து வருவனதாழிசைக் குறளெனப்படும்.

(உ-ம்.) நன்றுவார் வினைநையநாடொறு நற்றவர்க் கரசராயஞானநற், கண்ணினடியே யடைவார்கள் கற்றவரே.

இஃது ஈற்றடிகுறைந் திரண்டடிகளாற் பலசீர்பெற்றுவந்ததைக் காண்க.

38.—செந்துறைசிதைவுத் தாழிசைக் குறளாவதியாது?

விழுமியபொருளு மொழுகிய லோசையுமின்றியிரண்டடிகளுந் தம்முளொத்து வருவனசெந்துறைசிதைவுத் தாழிசைக்குறளெனப்படும்.

(உ-ம்.) பிண்டியினீழற் பெருமான்பிடர்த்தலை
மண்டலந்தோன்றுமால்வாழியன்னாய்.

இஃது சிறப்புமோசையுமின்றி யிரண்டடிகளுந் தம்முளொத்துவந்ததைக்காண்க.

39.—குறட்டாழிசையாவதியாது?

செப்பலோசையிற் சிதைந்து வேற்றுத்தளை விரவிகுறள் வெண்பாவிற்பிழைந்து வருவனகுறட்டாழிசை யெனப்படும்.

(உ-ம்.) வண்டார்பூங்கோதை வரிவளைக் கைத்திருநுதலாள்
பண்டைய ளல்லள்படி.

இஃதுசெப்பலோசையிற் சிதைந்து வேற்றுத்தளைவிரவி குறள்வெண்பாவிற் பிழைந்து வந்ததைக் காண்க. இஃதுசந்தழிதாழிசைக் குறளெனவுஞ் சொல்லப்படும்.

40.—வெண்டாழிசையாவதியாது?

மூன்றடியானடந்து ஈற்றடி சிந்தடியாய் வருவனவெண்டாழிசை அல்லது வெள்ளொத்தாழிசை யெனப்படும்.

(உ-ம்.) நண்பிதென்றுதீய சொல்லார்
முன்பு நின்றுமுனிவுசெய்யார்
அன்புவேண்டுபவர்

இஃது மூன்றடிகளா யீற்றடி சிந்தடியானடந்து வந்ததைக்காண்க.

41.—வெளிவிருத்த வெண்டாழிசையாவதியாது?

நான்கடிகளா யவ்வவ் வடிகளினீற்றிற் றனிச்சொற்பெற்று ஒருசார்பு எழுத்துக்களாய்க் காட்டி நிற்பனவெளி விருத்த வெண்டாழிசை யெனப்படும்.

(உ-ம்.) ஆவாவென்றே யஞ்சினராழ்ந்தா ரொருசாரார்
கூகூவென்றே கூவிளிகொண்டா ரொருசாரார்

மாமாவென்றே மாய்ந்தனர் நீந்தாரொருசாரார்
ஏகிர்காகீரென்செய்து மென்றுரொருசாரார்

இஃது நான்கடிகளாலொருசாரா ரென்னுந் தனிச்சொற்சார் புபெற்றுவந்ததைக் காண்க.

42.—வெண்பா விருத்தமாவதியாது?

மூன்றடியல்லானன் கடியானு முற்றுப்பெற்று, அவ்வவ் வடிகளி னிறுதிக்கண்டனிச் சொற்பெற்று வருவன வெண்பா விருத்த மெனப்படும்.

(உ-ம்.) நீடுலகினீங்காத கொலைகளவு நெடுங்கோபம்—பாவங் கொல், தேடுபரமாதர்சுகஞ் சள்ளுண்டதேகமிவை— பாவங்கொல், கூடுகருந் தூதரிடஞ்சென்று இவர்கொ ண்டவின்று—பாவங்கொல்.

இஃது மூன்றடியாய்த் தனிச்சொற் பெற்றுமுற்றி வந்ததைக் காண்க. இஃது வெள்ளைவிருத்தம், வெளிவிருத்த மெனவுஞ்செ ல்லப்படும்.

43.—வெண்பாவுக்குரிய வோசையாவதியாது?

செப்பலோசையெனப்படும்.

44.—செப்பலோசை யெத்தனை வகைப்படும்?

ஏந்திசைச் செப்பல், தூங்கிசைச்செப்பல், ஒழுகிசைச் செப்பலென மூன்றுவகைப்படும்.

45.—ஏந்திசைச் செப்பலாவதியாது?

வெண்சீர் வெண்டளையான்வரும்யாப்பை யேந்திசைச் செப்ப லெனப்படும்.

(உ-ம்.) யாதானும் நாடாமலூராமலென் ஞெருவன்
சாந்துணையுங்கல்லாதவாறு.

இஃது வெண்சீர்வெண்டளையான் வந்ததைக் காண்க.

46.—தூங்கிசைச் செப்பலாவதியாது?

இயற்சீர்வெண்டளையான்வரும் யாப்பைத் தூங்கிசைச் செப்ப லெனப்படும்.

(உ-ம்.) அரையின்முடியினணிமார்பினெஞ்சில்.

இஃது இயற்சீர்வெண்டளையான் வந்ததைக் காண்க.

47.—ஒழுகிசைச்செப்பலாவதியாது?

வெண்சீரியற்சீரொன்றி விரவிவருவன வொழுகிசைச் செப்பலெனப்படும்.

(உ-ம்.) சீராம்பதியமருந்தேவனே தேவருக்கும்.

இஃது வெண்சீரியற்சீரான் வந்ததைக்காண்க.

வெண்பா.

முற்றிற்று.

---

## கலிப்பா.

---

48.—கலிப்பாவாவதியாது?

கலித்தளையானடந்து சிறுபான்மை யயற்றளையும்விரவி துள்ளலோசையிற் சிறிதும்வழுவாது தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகமென்னுமாறுறுப்புகளுந் தழுவிவருவன கலிப்பாவெனப்படும்.

49.—கலிப்பாவெத்தனைவகைப்படும்?

நேரிசை யொத்தாழிசைகலிப்பா, அம்போதரங்கவொத்தாழிசைகலிப்பா, வண்ணகவொத்தாழிசைகலிப்பா, தரவுகொச்சகக்கலிப்பா, தரவிணைகொச்சகக்கலிப்பா, சிஃறாழிசைகொச்சகக்கலிப்பா, பஃறாழிசைகொச்சகக்கலிப்பா, மயங்கிசைகொச்சகக்கலிப்பா, வெண்கலிப்பா, கலிவெண்பாவெனப் பத்துவகைப்படும்.

50.—நேரிசையொத்தாழிசைகலிப்பாவாவதியாது?

தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகமென்னும் நான்குறுப்புகளையும் பெற்றுவருவன நேரிசையொத்தாழிசைகலிப்பாவெனப்படும்.

51.—அம்போதரங்கவொத்தாழிசைகலிப்பாவாவதியாது?

தரவு, தாழிசை, அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகமென்னு மைந்துறுப்புகளையும் பெற்றுவருவனவம்போதரங்கவொத்தாழிசை கலிப்பாவெனப்படும்.

52.—வண்ணகவொத்தாழிசைகலிப்பாவாவதியாது?

தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதக மென்னுமா றுறுப்புகளையும் பெற்றுவருவன வண்ணகவொத்தாழிசைகலிப்பாவெனப்படும்.

அராகமென்றாலும் வண்ணமென்றாலுமொக்கும்.

53.—தரவாவதியாது?

நாற்சீரிரண்டு நான்கடிகளாற்கலியோசை தழுவிவருவன தரவு யெனப்படும்.

(உ-ம்.) வாசிகையுங்கொன்றையும் வெள்ளெருக்கும் விரை
தொடுத்த - வாசிகையினூடேவெண்மதிக்கொழுந்தை
ச்சொருகினையே.
பாய்புலியினுரியசைத்தப்பலபுள்ளிப்படிவமெல்லாம்
ஆயிரவாய்க்கருங்கச்சையழலுமிழவிசைத்தனையே.
இஃது நாற்சீரடியான்வந்ததைக்காண்க.

(உ-ம்.) கன்னெஞ்சராய கௌசிகனார் நெஞ்சம்போல்
வன்னெஞ்சோவுன்னெஞ்சமென்னமயிலுரைத்தாள்
தன்னெஞ்சுருகியொருசற்றேதயையாகித்
தின்னுங்கனியருந்தித்தெண்ணீருந்தான்குடித்தான்.
இஃது நாற்சீர்நான்கடியான்வந்ததைக்காண்க இஃது தரவு
கொச்சகக்கலிப்பாவெனப்படும்.

54.—தாழிசையாவதியாது?

நாற்சீருமதற்குமிக்கனவாயடிகளிரண்டு முதலான்காகவந்துக்கலியோசையாற்றாழ்ந்த ஒலியினிற்பனத்தாழிசை எனப்படும்.

(உ-ம்.) தேவராய்த் தேவர்க்குந்தெரியாதவெளியுருவாய்
மூவராய் மூவர்க்குண் முதல்வனாய் நின்றோய் நீ.
இஃது நாற்சீரடியாற் றாழ்ந்தவோசையிற்றாழிசையாகவந்ததைக்காண்க.
(உ-ம்.) கரியகுயிலெனப்பிறங்குகவின் குறத்தியெதிரேகி
யரியமகபதியுதவுமணங்கினணங்குணராதே
பிரியமொடு மணம்புணரும்பெரும்புகழுமுடையோனே
இஃது நாற்சீர் மூன்றடியாற்றாழ்ந்தவோசையிற் றாழிசையாக
வந்ததைக்காண்க.

55.—வண்ணமாவதியாது?

இருசீர்முதற்பலசீராற் பெரும்பாலுஞ் சந்தங்குறையாது, உதாரண வாய்ப்பாட்டாலமைந்துப் பலவடிகளான் வருவன வண்ணங்களெனப்படும்.

(உ-ம்.) தானு தனதன—"பாணுர்மொழிநிறை
சோணசலரடி
பேணு தவனுறு
மாணு நரகமே

இஃது வண்ணக்குறளடி வஞ்சிவிருத்தமாகவந்ததைக்காண்க.

(உ-ம்.) தனன தானன தந்தனு—"நரகவாதையில்வன்பிறர்
தரணிமீதொருகொன்பெறுர்
சுரருலோகமுமின்புறு
ரருணநாயகரன்பரார்.

இஃது வண்ணச்சிந்தடிவஞ்சிவிருத்தமாகவந்ததைக்காண்க.

(உ-ம்.) தனதன — தனதன — தனதன — தனதன.
சிவசிவ வெனநுவல் செயலுறு மறிவினர்
பவமறு மிருளொடு பலவினை யெரிபடு
மமரரு முனிவரு மவர்தமை விழைகுவர்
சமரச நிலையினர் தமரென மருவுவர்
குகனெனும் வலிகொடு கொடியவர் குடிகெட
மகபதி மகிழுற மலைதொறு நிகழ்வரே

இஃது வண்ணநிலைமண்டிலவாசிரியப்பாவாகவந்ததைக்காண்க

(உ-ம்.) தந்ததன

இந்திரனுறந்துயரமின்றியொழியும்படிசெய்
செந்தில்முருகன்கழல்கள் சிந்தனையில்—வந்திலகின்
மந்திரமுமெந்திரமும்வம்புபடு மன்றியதன்
முந்தியிகழ் பண்புமுரண்.

இஃது வண்ணவெண்பாவாகவந்ததைக்காண்க.

(உ-ம்.) தானதன — தானதன — தானதன — தானனா-
ஆறுமுக நாதனடி யார்களடி பேணுமே
மாறுபடு மாதர்முலை மாயையிடை வீழ்தீயே
னீறுதவர் ஞானனிலை யாவுமுறு மாறோதாய்
நாறுமலர் மீதுவளர் நாமகளின் மாதாவே.

இஃது வண்ணவெள்ளைவிருத்தமாகவந்ததைக்காண்க.

(உ-ம்.) தந்தன - தானன - தானன - தானனத் - தானதனா
செங்கதி ரோசிவ னேவுமை யோவடற் சேதரனே
வெங்கர னேகுக னேகுரு வோவெமக் காதரமா
யிங்கழி யாதுறு சீர்பெறு மாறளித் தேசிலரே
தங்கருள் வாரிதி யூடமிழ் வாகிடத் தாடரலே.

இஃது வண்ணக் கலித்துறை யாகவந்ததைக் காண்க.

இஃதேபோற்பாவினும் பாவினங்களி
னும் வண்ணங்களாக வருவதுள.

வண்ண உதாரணவாய்ப்பாடு-"

தத்த—பத்தி-ஒற்றர்-சிட்டன்-நெய்த்து-மெய்ச்சொல்-கர்த்தன்.
தாத்த—காற்று-பாட்டர்-கூத்தன்-பார்ப்பு-தூர்த்தன்-காழ்த்தல்.
தந்த—மஞ்சு-கொண்கர்-கந்தன்-மொய்ம்பு-மொய்ம்பர்-மொய்ம்பன்
தாந்த—வேந்து-வேந்தர்-பாங்கன்-பாய்ந்து-சார்ங்கர்-சார்ங்கம்.
தன—குரு-தவர்-சுதன்.

தான—காது-சூதர்-பாதம்-கேள்வி-சார்கண்-கூர்முள்-மான்மி -தே ன்வி-மாண்மன்-கூன்வில்-மான்மர்-மாண்விண்.

தன்ன—கன்னி-மென்வி - அன்னன்-பொன்வில் - முன்னர்-என் வென்.

தய்ய—வள்ளி-செய்தி-வள்ளல்-செய்தல்-மெய்யன்-செய்கண்.

தத்தா—அத்தா-கற்றூர்-தொட்டான்-பொய்க்கோ-நெய்க்கோல்-மெ ய்க்கோன்.

தாத்தா—சாத்தா-ஆற்றூர்-மாற்றான் - வேய்ப்பூ-வாய்த்தோர் - சீர்க் கோன்.

தந்தா—அந்தோ-தங்கார்-வந்தேன்-மொய்ம்பா-மொய்ம்போர்- மொ ய்ம்போன்.

தாந்தா—சேந்தா-வாங்கார்-நான்றான்-நேர்ந்தோ-சார்ந்தோர்-மாய்ந் தான்.

தனா—குகா-சிறார்-கவான்.

தானா—தாதா-போகார்-மேவான்-ஓர்பூ-கூர்வேல்-சேர்மான்-கேண் மோ-ஆன்மா-ஆண்மான்-கூன்வாள்-வான்மேல்-தேன்வீண்

ன்னா—அன்னா-மன்வா - முன்னோன்-அன்னோர் - பொன்வேல்- தண்வான்.

தய்யா—மெய்யே-நொய்தோ-தள்ளார் - செய்தார்-வல்லோன்-ஒல் கேன்.

இவ்வாய்ப்பாடே வண்ணத்துக்குரிய பதங்களைச் சேர்க்கப்ப டுவனவாம்.

56.—அம்போதரங்கமாவதியாது?

இரண்டு முதனாற்சீரளவு மொன்றியு மொன்றாததுமாக ப்பல வடிகளா லடுக்கிவருவன வம்போதரங்க மெனப்படும்.

(உ-ம்.) அலைகடல்வயிறு கலக்கினைபவுணரை மதலையடக் கினை. மலைகடல்களிறு வதைத்தனை மலைதலைகவிழ வெடுத்தனை.

இஃதுமுச்சீரோரடி நான்கம்போதரங்கங்களாக வந்ததைக்காண்க.

(உ-ம்.) அறுவர்சொற்பொதுவாகினை
யிறுதியற்றுளயோகினை
கறுவுமற்பொலிவாகினை
நறுமலர்ப்புனமேவினை.

இஃது முச்சீரோரடி நான்கம்போதரங்கங்களாக வந்ததைக்காண்க. இஃது எட்டடிகளாக வருவதுமுள.

(உ-ம்.) பற்பலமலைமுடி மீதுமேவினை
விற்பனமலிகவுமாரர் நாவினை
பொற்புறுமறமகளீயு மாவினை
யற்புதம்விழைகிலாநேயமோவினை.

இஃது நாற்சீரோரடி நான்கம்போதரங்கங்களாக வந்ததைக் காண்க.

(உ-ம்.) நஞ்சமுமமுதமும் நரகும்வீடுமாய்
வஞ்சமும் ஞானமுமறப்புமாயினை
இருவினைப்பகுதியு மின்பதுன்பமும்
கருணையும் வெகுளியுங் கருத்துமாயினை.

இஃது நாற்சீரோரடி நான்கம்போதரங்கங்களாகவந்ததைக்காண்க.

(உ-ம்.) உண்ணிறைந்தனை — எண்ணிறந்தனை
யொருமையாயினை — பெருமைமேவினை.

இஃது இருசீரோரடி நான்கம்போதரங்கங்களாகவந்ததைக்காண்க.

(உ-ம்.) ஏனமிர்ந்தனை — வானநேர்ந்தனை
அங்கமாறினை — சங்கமேறினை
மால்பொடித்தனை — வேல்பிடித்தனை
தோகைகட்டனை — வாகைதொட்டனை

இஃது இருசீரோரடி யெட்டம்போதரங்கங்களாக வந்ததைக்காண்க.

இஃது தனிதாகிற்றலாற் றனிச்சொலெனப்படும்.

57.—சுரிதகமாவதியாது?

ஈற்றுக்கயலடி யோர் சீர்குறைந்தாசிரியப்பாவான்வருவதாசிரியச்சுரிதகமெனப்படும்.

(உ-ம்.) வேதமோடாகமம் விளம்புநெறியின
பேதமொன்றில்லாப் பெருமைகாட்டிக்
கருவழியுழலாது கழித்துன்
றிருவடிக்கீழலிற் சேர்த்தருளெனையே.

இஃது ஈற்றுக்கயலடி சுருங்கிசேரிசையாசிரியச்சுரிதகமாகவந்ததைக்காண்க,

(உ-ம்.) திருநாரணனைச்சேர்ந்தனம்
சரணாவிந்தந்தஞ்சமெனதிரங்தே.

இஃது ஈற்றுக்கயலடி சுருங்கிசேரிசை யாசிரியச்சுரிதகமாக வந்ததைக் காண்க.

சுரிதகமெட்டடியானும்வரப்பெறும்.

58.—தரவுகொச்சகக் கலிப்பா, தரவிணைகொச்சகக் கலிப்பா, சிஃறாழிசை கொச்சகக் கலிப்பா, பஃறாழிசை கொச்சகக் கலிப்பா, மயங்கிசை கொச்சகக் கலிப்பாவாவதியாது?

ஒருதரவுவந்து மிரண்டுதரவுவந்துந் தாழிசைகட் சிலவு ம்பலவும் வந்துந்தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகமென்னு மாறுறுப்புகளுந் தம்முண் மய ங்கியும், வெண்பாவினோடு மாசிரியத்தினோடு மயங்கியும், வருவனவெல்லாங் கொச்சகக் கலிப்பா வென்னப்படும். ஒரு தரவுவந்தாற் றரவுகொச்சகக் கலிப்பா வென்றும், தரவிரண் டாகவந்தாற் றரவிணைகொச்சகக் கலிப்பாவென்றும், சிலதாழி சைவந்தாற் சிஃறாழிசை கொச்சகக் கலிப்பா வென்றும், பல தாழிசைகண் வந்தாற் பஃறாழிசை கொச்சகக் கலிப்பா வென் றும், தம்முண் மயங்கியும் பிறவாறினோடு மயங்கியும் வருவ னவெல்லா மயங்கிசை கொச்சகக் கலிப்பாவென்றுஞ் சொல் லப்படும்.

59.—வெண்கலிப்பாவாவதியாது?

வெண்டளை கலித்தளையான் விரவிக்கலியோசை பெற்று வருவன வெண்கலிப்பா வென்னப்படும். வேற்றுத்தளையானும் விரவிவருவதுள.

(உ-ம்.)வாளார்ந்தமழைத்தடங்கண்வனமுலைமேன்வம்பனுங்கக்
கோளார்ந்தப்புணுகங்குழைபுரளக் கோட்டெருத்தின்

மாலைதாழ்கூந்தலார் வான்முறையான் வந்தேத்தச்
சோலைதாழ்பிண்டிக்கீழ்சூழ்ந்தவர்தஞ்சொன்முறையால்
மனையறமுந்துறவறமுமன்னவர்க்கும்விண்ணவர்க்கும்
வினையறுக்கும் வகைதெரிந்துவீடொடுகண்டிவையுரைத்த
தொன்மைசால்கழிகுணத்தேந்துறவரசைத் தொழுதேத்த
நன்மைசால் வீடெய்துமாறு.

இஃது தன்றளையானுந் துள்ளலோசையானும் வந்ததைக்காண்க.

(உ-ம்.) ஏர்மலர்நறுங் கோதையெருத்தலைப்பவிறைஞ்சித்தன்
வார்மலர்த் தடங்கண்ணார்வலைப்பட்டு வருந்தியவென்
ஞூர்வரையகன் மார்பன் றனிமையை யறியுங்கொல்
சீர்மலிகொடியிடை சிறந்து

இஃது தன்றளையானு மாசிரியத்தளையானும் வந்ததைக்காண்க

60.—கலிவெண்பாவாவதியாது?

கலித்தளை வெண்டளையான் விரவி * வெள்ளோசை பெற்று, இரண்டாமடிச் சிந்தடியானுந் தனிச்சீர்பெற்று, வருவனக் கலிவெண்பா வெனப்படும். தனிச்சீரின்றி இன்னிசையான் வருவதுமுள. கலித்தளை வெண்டளை பிறழ்ந்துவேற்றுத் தளையானும் வருவதுள.

(உ-ம்.) வேலோங்குவிழியுடையார் மேவுந்துவரிதழ்வாய்ப்
பாலோங்கு ஞானப்பழ மொழியார்—மேலோங்கு
நெற்றிப்பிறையழகாளிடும் முகைநகையாற்
சுற்றிப்பிறங்குமணித்தோகையார்—மற்றினியான்
பேசப்பமொதர்ப்பின்னையா மென்னலாம்
தேசத்துயர்வண்ணச்சித்திரமே— ... ... ...

* வெள்ளோசை—வெண்பாவோசை.

இஃது கலித்தளைவெண்டளையான் விரவி வெள்ளோசைபெ ற்று, அவ்வவ்விரண்டாமடிச் சிந்தடியாயு மவ்வடியினிற்றிற் றனிச் சீரும் பெற்றுவந்ததைக் காண்க.

(உ-ம்.) தாதுறையும் நாற்றத் தாமரையின் செந்தேன்
மீதுறையும்வல்லிமெல்லிடையாள்.
தாமம்புனைந்தசரஸ்வதிதன்மெஞ்ஞான
நாமம்புனைந்தசொன்னுவுடையேன்.

இஃது கலித்தளை வெண்டளையான் விரவிவெள்ளோசை பெ ற்று, அவ்வவ் விரண்டாமடிச் சிந்தடியாயுந் தனிச்சீரின்றி வந்த தைக் காண்க.

61.—பாவினங்களுள்—கலித்துறை யெத்தனை வகைப்படும்?

காப்பியக்கலித்துறை, கட்டளைக்கலித்துறை யெனவிர ண்டுவகைப்படும்.

62.—காப்பியக் கலித்துறையாவதியாது?

நெடிலடி நான்குடையனவாய்க் கலியோசை பெற்றுவரு வன கலித்துறை யெனப்படும். காப்பியக் கலித்துறையெனி னுங் கலித்துறை யெனினு மொக்கும்.

(உ-ம்.) யானுந்தோழியுமாயமாடுந்துறை நண்ணித்
தானுந்தேரும் பாகனும் வந்தென்னலனுண்டான்
தேனும்பாலும் போல்வனசொல்லிப்பிரிவானேல்
கானும்புள்ளுங்கைதையுமெல்லாங்கரியன்றே.

இஃது ஐஞ்சீரடி நான்குடையனவாய்க் கலியோசைபெற்றுவ ந்ததைக்காண்க.

63.—கட்டளைக்கலித்துறையாவதியாது?

ஐஞ்சீரடி நான்குடையனவாய் முதற்சீர் நான்கும் வெண்டளைபிழையாது கடைச்சீர் விளாங்காயாகி நேரசை 16, நிரையசை 17, எழுத்துக்களுமாகவருவன கட்டளைக்கலித்துறை எனப்படும்.

இஃது வெண்டளைபிழைந்துவருவதுமுள.

(உ-ம்.) சென்மந்தரக்கங் கருமஞ்சுழி பிணிசேவினங்கு
சென்மந்தரங்கதிர்பொன்கோள்கண்மாரிதிண்கூற்றசனி
சென்மந்தரங்கவற்றுள்விழுவோர்கரைசேர்க்கும்வங்கஞ்
சென்மந்தரங்கவின்றேஎாரரங்கர்திருப்பதமே-

இ∴து ஐஞ்சீரடி நான்குடைத்தாயனவாய் வெண்டளைபிழையாது நேரசையாறெற்றுநீக்கி யவ்வவ்வடிகளுக்கும் 16, எழுத்துக்களாக வந்ததைக்காண்க.

(உ-ம்-) ஒருசந்தி தன்னிலனநீக்கிப்பல்பண்ட முன்னுதலால்
இருசந்தியாகிப்பலசந்தியாகியெழுசந்தியாய்த்
தெருசந்தியாவுஞ்சிரிக்குமென்றீவினைதீர்த்தலகை
உருசந்தியாவண்ணநாயேனையாண்டருளுத்தமனே-

இஃது ஐஞ்சீரடி நான்குடைத்தாயனவாய் வெண்டளைபிழைந்து நிரையசையாறெற்றுநீக்கி யவ்வவ்வடிகளுக்கும் 17, எழுத்துக்களாகவந்ததைக்காண்க-

64.—கலித்தாழிசையாவதியாது?

இரண்டும் பலவடிகளானும் வந்து, ஈற்றடி மிகுந்துமல்லா

தவடிக டம்முளொத்து மொவ்வாதுமாகவருவதே கலித்தாழி சையெனப்படும்.

(உ-ம்.) பூண்ட பறையறையப் பூதமருள
நீண்டசடையானுடுமே
நீண்டசடையானுடுமென்ப
மாண்டசாயன்மலைமகள்காணவே.

இஃது ஈற்றடி மிகுந்து மிரண்டாமடிகுறைந்து முதலடியுமூன் றுமடியுமொத்துவந்ததைக்காண்க.

65 —கலிவிருத்தமாவதியாது?

அளவடியல்லானெடிலடிநான்குடையனவாய்க் கலியோ சைபெற்றுவருவன கலிவிருத்தமெனப்படும்.

(உ-ம்,) வாய்ந்தமின்னை மடந்தையராக்கிவின்
போந்திடாமலன் றேமலர்ப்புங்கவன்
சாந்தணிந்த தமனியக்குன்றென
ஏந்துவெம்முலைப்பாரமியற்றினான்.

இஃது அளவடி நான்குடையனவாய்க் கலியோசைபெற்று வந்ததைக்காண்க.

(உ-ம்.) கூத்தாடுமருணேசர்வரையன்பர்பொருளன்புகொண்டுன்னையு
நீத்தார்கொனிழலாருமிலையாகிநின்றுய்நெடுங்காலமே
பார்த்தாலுமயலேகினைத்தாய்சலித்தாய்பசுந்தென்றலாற்
பூத்தாய்பொன்னிறமாகயென்னுகமேயன்னபுன்னுகமே

இஃது நெடிலடி நான்குடையனவாய்க் கலியோசை பெற்றுவ ந்தைதக் காண்க.

66.—கலிப்பாவுக்குரிய வோசையாவதியாது?

துள்ளலோசை யெனப்படும்.

67.—துள்ளலோசை யெத்தனை வகைப்படும்?

ஏந்திசைத்துள்ளல், அகவற்றுள்ளல், பிரிந்திசைத்துள் ளலென மூன்றுவகைப்படும்.

68,—ஏந்திசைத் துள்ளலாவதியாது?

வெண்டளையான்வரும் யாப்பையேந்திசைத் துள்ளலெ னப்படும்.

(உ-ம்.) வெய்யவனைக் கண்டு விரிவதல்லாற்பூங் கமலஞ்
செய்பமனமகிழ்ச்சி செய்யுமோ— ... ... ... ...

இஃது வெண்டளையான்வந்ததைக் காண்க.

69.—அகவற்றுள்ளலாவதியாது?

தன்றளையான் வரும்யாப்பை யகவற்றுள்ள லெனப்படும்.

(உ-ம்.) தடமாடேந் தனமாதர்மிருகமலந்தமதுமுகம்,

இஃது கலித்தளையான் வந்ததைக்காண்க.

70.—பிரிந்திசைத்துள்ளலாவதியாது?

வெண்டளையானுங் கலித்தளையானும் விரவிவரும் யா ப்பைப்பிரிந்திசைத்துள்ள லெனப்படும். வேற்றுத்தளையானும் விரவிவருவதுள.

(உ-ம்.) ஒருநாலுமுகத்தவனோ டெகின்றுயென்பரதுன்
றிருநாபிமலர்ந்ததல்லாற்றிருவுளத்திலுணராயால்.

இஃது வெண்டளைகலித்தளையான்விரவி வந்ததைக்காண்க.

கலிப்பா
முற்றிற்று.

---

## வஞ்சிப்பா.

---

71.—வஞ்சிப்பாவாவதியாது?

இருசீரல்லது முச்சீரடிகளாற்றனிச்சொற்பெற்று வருவன வஞ்சிப்பா வெனப்படும்.

72.—வஞ்சிப்பாவெத்தனைவகைப்படும்?

குறளடிவஞ்சிப்பா, சிந்தடிவஞ்சிப்பா வென விரண்டுவகைப்படும்.

73.—குறளடிவஞ்சிப்பாவாவதியாது?

இருசீருடைத்தாயனவாய்த் தனிச்சொற் பெற்றாசிரியச்சுரிதகத்தான் வருவன குறளடிவஞ்சிப்பா வெனப்படும்.

(உ-ம்.) பூந்தாமரைப் போதலம்வரத்
தேம்புனலிடை மீன்றிரிதரு
வளவயலிடைக்களவயின்மகிழ்
வினைக்கம்பலைமனைச்சிலம்பவு
மனைச்சிலம்பியமணமுரசொலி

வயற்கம்பலைக் கயலார்ப்பவு—நாளு
மகிழ்மகிழ்துங்கூரன்
புகழ்தலாளுப்பெருவண்மையனே.

இஃது குறளடியாய்த் தனிச்சொற்பெற் றாசிரியச்சுரிதகத்தா ன்வந்ததைக் காண்க.

74.—சிந்தடிவஞ்சிப்பாவாவதியாது?

முச்சீருடைத்தாயனவாய்த் தனிச்சொற் பெற்றாசிரியச் சுரிதகத்தான் வருவன சிந்தடிவஞ்சிப்பா வெனப்படும்.

(உ-ம்.) நறைமிகவள ரிதழுறுமரை நளிர்பொருட்டுறு
நிறையொளிரு மணிதவழ்கு நிலைபருட்டிரு—மலர்மகணின
துயர்மாமணிசரணம்புயம்
தருவாயொளிர்கருணைநிதி தளிர்மாமகளே.

இ∴து சிந்தடியாய்த் தனிச்சொற்பெற் றாசிரியச்சுரிதகத்தா ன்வந்ததைக் காண்க.

75.—பாவினங்களுள்—வஞ்சித்துறையாவதியாது?

இருசீரடி நான்குடைத் தாயனவா யொரு பொருளின் மீதோன்றி வருவன வஞ்சித்துறை யெனப்படும்.

(உ-ம்.) மைசிறந்தனமணிவரை
கைசிறந்தனகாந்தளும்
பொய்சிறந்தனகாதலர்
மெய்சிறந்திலர்விளங்கிழாய்

இ∴து குறளடியா யொருபொருளின் மேற்றனித்து வந்ததைக் காண்க.

76.—வஞ்சித்தாழிசையாவதியாது?

இருசீரடி நான்குடைத்தாயனவாய் 3. அல்லது 4. செய்யுளொரு பொருளின் மீதடுக்கிவருவன வஞ்சித்தாழிசையெனப்படும்.

(உ-ம்) மடப்பிடியை மதவேழம்
தடக்கையான் வெயின்மறைக்கும்
இடைச்சுரமிறந்தார்க்கே
நடக்குமென்மனனேகாண்.
பேடையையிரும்போத்துத்
தோகையான்வெயின்மறைக்கும்
காடகமிறந்தார்க்கே
ஓடுமென்மனனேகாண்.
இரும்பிடியையிகல்வேழம்
பெருங்கையான் வெயின்மறைக்கும்
அருஞ்சுரமிறந்தார்க்கே
விரும்புமென்மனனேகாண்.

இ∴து குறளடியா யொருபொருளின்மீது 3, செய்யுளடுக்கி வந்ததைக் காண்க. இஃதேபோன் 4, செய்யுளொருபொருளின் மீதடுக்கி வருவதுமுள.

77.—வஞ்சிவிருத்த மெத்தனை வகைப்படும்?

குறளடிவஞ்சிவிருத்தம், சிந்தடிவஞ்சிவிருத்த மெனவிரண்டுவகைப்படும்.

78.—குறளடிவஞ்சிவிருத்தமாவதியாது?

இருசீரடி நான்குடைத்தாயன குறளடிவஞ்சிவிருத்தமெனப்படும்.

(உ-ம்.) இருட்டதும்புகோதையார்
மருட்டதும்புவினைகெட
வருட்டதும்புகண்ணினாற்
றெருட்டதும்பநோக்கினான்.

இ∴து குறளடி நான்காய்வந்ததைக் காண்க.

79.—சிந்தடிவஞ்சிவிருத்தமாவதியாது?

முச்சீரடி நான்குடைத்தாயன சிந்தடிவஞ்சிவிருத்த மெனப்படும்.

(உ-ம்.) சோலையார்ந்தசுரத்திடைக்
காலையார்கழலார்ப்பவும்
மாலைமார்பன்வருமாயின்
நீலவுண்கணிவள்வாழுமே.

இ∴து சிந்தடி நான்காய்வந்ததைக் காண்க.

80.—வஞ்சிப்பாவுக்குரிய வோசையாவதியாது?

தூங்கலோசை யெனப்படும்.

81.—தூங்கலோசை யெத்தனை வகைப்படும்?

ஏந்திசைத்தூங்கல், அகவற்றூங்கல், பிரிந்திசைத் தூங்கலென மூன்றுவகைப்படும்.

82.—ஏந்திசைத்தூங்கலாவதியாது?

ஒன்றிய வஞ்சித்தளையான் வரும் யாப்பை யேந்திசைத் தூங்க லெனப்படும்.

(உ-ம்.) வினைத்திண்பகைவிழச்செற்றவன்
வனப்பங்கயமலர்த்தாளிணை
நினைத்தன்பொடுதொழுதேத்தினர்—நாளும்
மயலார்நாற்கதிமருவார்
பெயராமேற்கதிபெருகுவர்விரைந்தே.

இஃது ஒன்றியவஞ்சித்தளையான் வந்ததைக் காண்க.

83.—அகவற்றூங்கலாவதியாது?

ஒன்றாதவஞ்சித் தளையான் வரும் யாப்பை யகவற்றூங்கலெனப்படும்.

(உ-ம்.) வானோர்தொழவண்டாமரைத்
தேனார்மலர்மேல்வந்தரு
ளானவருட்கூரறிவனைக்
கானார்மலர்கொண்டேத்திவணங்குநர்
பலர்புகழ்முத்திபெருகுவர்விரைந்தே.

இஃது ஒன்றாதவஞ்சித்தளையான் வந்ததைக் காண்க.

84.—பிரிந்திசைத் தூங்கலாவதியாது?

ஒன்றியுமொன்றாததும் பிறவுமயங்கியும் வரும்யாப்பைப் பிரிந்திசைத் தூங்கலெனப்படும்.

(உ-ம்.) எனைக்காத்தவனினியமாசடை
தனைவிளக்குஞ்சந்திரசேகரன்
றுணையலாததுணையிலைமன்னவ.

இஃது ஒன்றியு மொன்றாததும் பிறதளையானுமயங்கிவந்ததைக் காண்க.

வஞ்சிப்பா.

முற்றிற்று.

—*—

யாப்பியல்

முற்றிற்று.

—

## மூன்றாவது
# ஒழிபியல்

—*—

1.—ஒழிபியலாவதியாது?

பாஇனங்களிற் பகராதொழிந்தவை பகர்தலே யொழிபிய லெனப்படும்.

2.—எழுத்துக்களுளலகுபெறாதனவியாது?

சீருந்தளையுங்கெட வந்த விடத்துக் குற்றியலிகரம், குற்றியலுகரம், உயிரளபெடை, ஒற்றெழுத்துக்களுமலகு பெறா வெனச் சொல்லப்படும்.

(உ-ம்.) குழலினிதியாழினிதென்பதம்மக்கள்
மழலைசொற்கேளாதவர்.

அருளல்லதியாதெனிற்கொல்லாமைகோறல்
பொருளல்லதவ்வூன்றினல்

இ∴து குழலினிதியாழினிதென்—என்றவிடத்து ஆசிரியத் தளையும், அருளல்லதியாதெனில்—என்றவிடத்துக் கலித்தளையும், விரவிவந்த தெனின், வெண்பாச் சீருந்தளையுங் குன்றிப்போம். ஆதலாற் குற்றியலிகரத்தை யிவ்விலக்கணத்தா லலகுபெறாவெனக் கொள்ள வெண்பாச் சீருந்தளையுஞ் சிதையாவாம்.

(உ-ம்.) பாடுபட்டுத்தேடிப்பணத்தைப்புதைத்துவைத்துக்
கேடுகெட்டமானிடரேக்கேளுங்கள்—கூடுவிட்
டாவிதான்போனபின்பாரேயனுபவிப்பார்
பாவிகாளந்தப்பணம்.

இஃது பாடுபட்டு—கேடுகெட்ட—என்றவிடத்து, ஆசிரியத்த ளைவிரவி வெண்பாச் சீருந்தளையுங் குன்றியதாற் குற்றியலுகாரத்தை க்களைய வெண்பாச் சீருந்தளையுஞ் சிதையாவாம்.

(உ-ம்.) மோரோஒவேனக்கூறிமுன்வந்தநுண்ணிடையாட்

சீரோஒவெனக்கறியச்செப்பு — ... ... ... ...

இஃது ஓகாரமளபெடுத்துக் கலித்தளை விரவி வெண்பாச்சீரு ந்தளையுங் குன்றியதா லளபெடையைக்களைய வெண்பாச் சீருந்த ளையுஞ் சிதையாவாம்.

(உ-ம்.) திருவேங்கடத்து நிலைபெற்று நின்றன சிற்றன்னை யால். இஃது கடைச்சீர், சிற்றன்னையால், என்றவிடத்து நால சைச் சீர்விரவிக் கட்டளைக் கலித்துறையின் சீருந்தளையுங் கெடுவ தானகர மெய்யைக்களையக் கட்டளைக் கலித்துறையின் சீருந்தளை யுஞ் சிதையாவாம்.

3.—வாராதசீரும்வருவதாயபாஇனங்களியாது?

வெண்பாவினுள்ளலசைச்சீர்வாரா. ஆசிரியத்துட் குற்றிய லுகரம் வந்துழியன்றிவாரா. கலியினுட்பெரும்பான்மை குற் றியலுகாம் வந்துழியன்றிவாரா. வஞ்சியுட்குற்றியலுகரம் வா ராதேயும் வரப்பெறும், நிழலென்னுஞ் சொல்லிறுதியாகிய நிரையீற்றுப் பொதுச்சீரெட்டும் வஞ்சியுளல்லது வேற்றுப்பா இனங்களுண் வரப்பெறாவாம்.

4.—பாஇனங்களுண் மருவியுமருவாது வருஞ் சீர்களியாது?

தேமாபுளிமா வென்னும் நேரீற்றியற் சீரிரண்டுங்கலிப்பா வினுட் புகப்பெறா. கருவிளங்கனி, கூவிளங்கனி யென்னும்

நிரைநடுவாகிய வஞ்சியுரிச் சீரிரண்டுங் கலிப்பாவினுட் புகப் பெறா. ஆசிரியப்பாவினுட் கருவிளங்கனி, கூவிளங் கனியெ ன்னுஞ் சீர்கள் புகப்பெறா. வஞ்சியுரிச்சீர் நான்கும் வெண் பாவினுட் புகப்பெறா. வெண்பாவினு ளியற்சீர் வெண்டளை வெண்சீர் வெண்டளையுமல்லாது வேற்றுத் தளைகள்விரவாது. கொச்சகக் கலிப்பாவினு ணேரீற்றியற் சீரும், நிரைநடுவாகிய வஞ்சியுரிச் சீரும் வாராவெனப்படும்.

5.—பாஇனங்களுண்மயங்கிய சீர்களியாது?

நேரீற்றியற்சீர் வெண்கலியினுட் கொச்சகத்துண் மயங்க வும் பெறும். நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீர் கொச்சகத்துண் மயங்கவும் பெறும். இயற்சீர்வெண்டளையான் வந்தவெண் பாவடியும் வஞ்சியடியு மாசிரியப்பாவினுண் மயங்கவும்பெ றும். வஞ்சிப்பாவினு ளாசிரியவடியுங் கலியடியு மயங்கவும் பெறும். இஃது நீங்கிய சீர்கள் பாஇனங்களுண் வந்துமயங்க வும் பெறும்.

6.—ஓசையிற்சிதையாது வரும்பாஇனங்களியாது?

துள்ளலோசையிற் சிறிதும் வழுவாது நாற்சீர்நாலடியான் வருவது தரவுகொச்சகக் கலிப்பாவென்றும், துள்ளலோசை யிற் சிறிதுவழுவி நாற்சீர் நாலடியான் வருவது கலிவிருத்தமெ ன்றுஞ் சொல்லப்படும்.

7.—அடிகள்மிகுந்துங்குறைந்தும்வரும்பாஇனங்களியாது?

வெண்பாவிற்கிரண்டடியே சிறுமை. வஞ்சிப்பாவிரண்ட

டியானும் வரப்பெறும்; மூன்றடியே சிறுமை. ஆசிரியப்ப மி ரண்டடி சுரிதகமாய் வரப்பெறும்; மூன்றடியே சிறுமை. கலிப்பாவுக்கு நான்கடியே சிறுமை. அம்போதரங்க வொத்தாழிசை கலிப்பாவும் வண்ணகவொத்தாழிசைகலிப்பாவு மொழித்து, அல்லாத கலிப்பாவுக்குத் தரவுமூன்றடியே சிறுமை. இப்பாஇனங்களுக்குப் பெருமை பாடுவோரது பொருண் முடிபேயாம். அம்போதரங்க வொத்தாழிசைகலிப்பாவுக்கும் வண்ணகவொத்தாழிசைகலிப்பாவுக்குஞ் சிறுமையின்றிப் பெருமையேயாம்; ஆறடியேதரவாம். கலிப்பாவுக்கு நான்கடியே சிறுமை, பெருமைபாடுவோரது பொருண் முடிபேயாம். தாழிசைக்கிரண்டடியேசிறுமை, பெருமை நான்கடியேயாம்; இடை மூன்றடியானும்வரபெறும்.

8.—பாஇனங்களுண்வரப்பெருவழுவுங்குற்றங்களுமியாது?

திணைவழுவு, பால்வழுவு, மரபுவழுவு, வினுவழுவு, விடைவழுவு, காலவழுவு, இடவழுவு யிவ்வேழு வழுக்களும்; எழுத்துக் குற்றம், சொற்குற்றம், பொருட்குற்றம், யாப்புக்குற்றம், அலங்காரகுற்றம், ஆநந்தக்குற்ற மிவ்வாறுகுற்றங்களும் நீக்கிப்பிரபந்தங்கள் 96-ம் இயற்றுவர்புலவர்.

ஒழிபியல்

முற்றிற்று.

---

